உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 29 ] சாதாரணஆண்டு புரட்டாசித்திங்கள் 10-10-70 [ இதழ் 11






கலைமகள்





ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

ஆனசுக துக்கத்
 தழுந்துகினும் ஞானிகள்தாம்
யானெனதென் றெண்ணி
 இயைந்திடினும் — தானதற்கு
வேறென் றருளால்
 விரளமாய்க் காணிலென்றும்
ஏறுமோ கன்மம்
 இலை (92)

ஆசிரியர் :

வித்துவான்
சோமசுந்தரத் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர் :

மகாவித்துவான்
சி. அருணைவடிவேல் முதலியார்

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

## தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 29 || 10-10-70 || இதழ் 11

## உட்பொருள்



உ

குருபாதம்

தருமையாதீனம்

25 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக
ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்கள்

தீபாவளித் திருநாளை முன்னிட்டு

வழங்கியருளிய

# ஆசியுரை

திருச்சிற்றம்பலம்

இல்லக விளக்கது விருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே.

திருச்சிற்றம்பலம்

தீபாவளித் திருநாள் நம் இந்திய நாடு முழுவதற்கும் அமைந்த பெருநாளாகும். இதனை நம் நாடு முழுவதிலுமுள்ள மக்கள் தங்கள் தங்களுக்கு இயன்ற அளவில் மிகச் சிறப்பாகக் கொண்டாடி மகிழ்வது மரபு. இந் நாளில் இல்லங்கள்தோறும் ஆடவரும் பெண்டிரும் குழந்தைகளும் எண்ணெய் முழுக்காடி, புத்தாடை புனைந்து, இன்சுவை உண்டு இன்பமாக இருப்பர். எல்லா இடங்களிலும் தீப ஒளியும், பிள்ளைகளின் ஒளி விளையாட்டுக்களும் விளங்கி இருளை நீக்கி ஒளி மயமாக விளங்கச் செய்யும்.

பிரளய வெள்ளத்திலிருந்து பூமியைக் காப்பதற்கு வராக அவதாரங்கொண்ட திருமாலுக்கும் பூமி தேவிக்கும் பிறந்த நரகாசுரன் என்பவன் பின்பு கண்ணபிரானுடைய தேவிகளில் ஒருத்தியாகிய சத்தியபாமையால் அழிக்கப்பட்ட பொழுது அவன் தன் இறுதிநாளை எல்லோரும் மகிழ்ச்சியாகக் கொண்டாட வேண்டும் என்று கண்ணபிரானை நோக்கிக் கேட்டுக்கொண்ட வரத்தின்படி கொண்டாடப் பட்டு வருவது தீபாவளித் திருநாள் என்பது புராண வரலாறு. மக்களுடைய உள்ளத்தில் தோன்றுகின்ற தீய குணங்களே அவர்களுக்குப் பகையாய் அமைந்து துன்பத்தைத் தருகின்றன. அத்தீயகுணங்கள் இறைவனுடைய சத்தியால் அழிக்கப்படுகின்றன என்பதே இவ்வரலாற்றின் தத்துவமாகும்.

இத்திருநாட்குக் காரணம் வேறு வகையாகவும் சில இடங்களில் சொல்லப்படுகின்றது. தீய குணங்கள் நீங்க இறைவனுடைய திருவருள் மேற்பட்டு விளங்குகின்ற நாள் சிறந்த நன்னாளேயன்றோ? 'தீபங்களின் வரிசை' எனப் பொருள்படுகின்ற தீபாவளித் திருநாளும் தீய சக்திகள் நீங்கி இறைவன் திருவருள் விளக்கமுறுவதையே காட்டுகின்றது. இத்தகைய நன்னாளாகிய தீபாவளியை மக்கள் யாவரும் நன்முறையில் கொண்டாடி அகஇருள் நீங்கி இறையருள் எய்தி அன்பும் இன்பும் அமைதியும் பெற்று நீடு வாழ, செந்தமிழ்ச் சொக்கன் திருவருள் முன்னிற்பதாக.



உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 29 | சாதாரண - புரட்டாசி - 10—10—70 | இதழ் 11

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே, – சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்



## ஞான வாணி

'வாணி' என்ற உடன், இன்று நாம் காலை, மாலை, நண்பகல் மூன்று வேளைகளிலும் கேட்கின்ற ஆகாச வாணியின் நினைவே நமக்கு உண்டாகும். ஆயினும், 'வாணி' என்பதற்கு, 'வாக்குத் தேவி' என்பது பொருள். இத் தேவியை, 'சொல் - சொல்மகள்' என்று குறிப்பிடுவர் தொல்காப்பியர். சொல், நாவினின்று பிறப்பதால், 'நாமகள்' என்பதும் இவட்குப் பெயராயிற்று. மக்கள் அறியத்தக்க கலைகள் பலவும் சொல்வடிவிலே அறிவிக்கவும், அறியவும் படுதலால், சொல்மகள் கலைமகளாகவும் விளங்குகின்றாள்.

ஒருவரும் இல்லாமல் ஓரிடத்தில் சொல் கேட்குமாயின், அதனை 'அசரீரி – சரீரம் இல்லாத சொல்' என்பர். அசரீரியைச் சேக்கிழார், 'வான்நிழல்' என்றார். அதனை, 'வான்மொழி' என்றலும் பொருந்தும். 'வான்மொழி' என்னும் தமிழ்ச் சொற்கு நேரான வடசொல்தான் 'ஆகாச வாணி' என்பது. எனவே, எங்கெங்குச் சொல் பிறக்கின்றதோ அங்கெல்லாம் 'வாணி' இருக்கின்றாள் என்பது தெளிவாகின்றது. எனினும், வழக்குச் சொற்கள் பிறக்கும் நாவைவிட, நூல்வடிவில் ஆகும் சொற்கள் பிறக்கின்ற நாவில்தான் சிறப்பாக வாணி வாழ்கின்றவளாகிறாள்.

படைப்புக் கடவுளாகிய நான்முகன் எப்பொழுதும் வேதத்தை ஓதுகின்றானும்; அதனால், அவனது நாவில் எக்காலத்தும் வாணி வீற்றிருக்கின்றாளாம். ஆகவே, வேதத்தையோ, பிற நூல்களையோ ஓதுகின்ற அனைவரிடமும் வாணி வீற்றிருப்பவளேயன்றோ! இக் கருத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்த திருவள்ளுவமாலை வெண்பா ஒன்று உண்டு. அது திருக்குறள், சங்கத்தில் அரங்கேறியபொழுது வாணி, தானே பாண்டியனை நோக்கிக் கூறியவாறாக அமைந்தது.

நாடா, முதல்நான் மறைநான் முகன்நாவில்
பாடா, இடைப்பா ரதம்பகர்ந்தேன் — கூடாரை
எள்ளிய வென்றி இலங்கிலைவேல் மாற,பின்
வள்ளுவன் வாயதென் வாக்கு

'பாண்டியனே, நான் உலகிற்கு உண்மையை உணர்த்த எண்ணிப் படைப்புக் காலமாகிய முதற்காலத்தில் பிரமதேவன் நாவில் வீற்றிருந்து நான்கு வேதங்களைப் பாடினேன். இடைக் காலத்தில் வியாத முனிவன் நாவில் வீற்றிருந்து பாரதத்தைப் பாடினேன். இப்பொழுது எனது ஆற்றல், திருவள்ளுவனது நாவில் வீற்றிருக்கின்றது' என்பது அவ்வெண்பாவின் பொருள். இதனால், 'இருக்கு முதலிய நான்கும் ஆதி வேதம்; பாரதம் மத்திய வேதம்; திருக்குறள் உத்தரவேதம்' என்பது கருத்து. எனவே, பொதுவாக, வாணி எல்லா மக்கள் நாவிலும் வீற்றிருக்கின்றாள் எனினும், 'சிறப்பாக அவள் நூல்

களைக் கற்பவர் நாவில் வீற்றிருக்கின்றாள்' என்பதும், 'அதனினும் சிறப்பாக அவள் புதுக்கவி புனையும் புலவர் நாவில் வீற்றிருக்கின்றாள்' என்பதும் நன்கு விளங்குவனவாம். ஆகவே, வாணியின் அருள் கிடைக்குமாயின், கல்விச் செல்வமும், கவிச் செல்வமும் கைமேற் பொருளாய்க் கிடைத்தல் உறுதியாகின்றது.

கல்விச் செல்வத்தையும், கவிச் செல்வத்தையும் வேண்டிக் கலைவாணியை வழிபட்டுப் பயன்பெற்றோர் எத்துணையோபேர். கலைமகளை வழிபட்டே கம்பர் கவிச்சக்கிரவர்த்தியாய் விளங்கினார் என்பர். அங்ஙனம் அவர் கலைமகளை வழிபட்டுப் பாடிய பாடலே 'சரசுவதி யந்தாதி' என்பது.* கலைமகளை வழிபட்டுக் கவி வன்மை பெற்ற கம்பர் கலைமகளது அருட்சிறப்பை விளக்கிப் பாடியனவாகச் சொல்லப்படும் இருவெண்பாக்கள் அறிதற்குரியன.

படிக நிறமும் பவளச்செவ் வாயும்
கடிகமழும் தாமரைபோல் கையும் — துடியிடையும்
அல்லும் பகலும் அனவரத மும்துதித்தால்
கல்லும்சொல் லாதோ கவி.

ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை — தூய
உருப்பளிங்கு போல்வாள்என் உள்ளத்தி னுள்ளே
இருப்பளிங்கு வாரா திடர்.

'ஆய கலைகள் அறுபத்து நான்கினையும் அவரவர்க்கு ஏற்ற பெற்றியால் உணர்த்துகின்றவள் கலைமகள்' என்றதனால், 'அவளே அனைத்துக் கலைக்கும் தலைவி' என்பது விளங்குகின்றது. அதுபற்றியே குமர குருபர அடிகள், வாணியை, 'சகல கலாவல்லி' என்றார். 'சகல கலைகட்கும் தலைவி' எனவே, வேண்டுவார் வேண்டும் கலைகளை வேண்டியவாறே அவள் தருவாள்; அங்ஙனம் தருகின்றபொழுது

---

* இதனை ஒட்டக்கூத்தர் பாடினார் என்று கூறுவாரும் உளர்.

அவரவர்க்கு அவ்வக் கலைவாணியாய் நின்று அவற்றைத் தருவாள் என்பது விளங்கும்.

எக்கலை வேண்டினும் தருகின்றவளாகிய கலைமகளை உலகக் கலைகளை வேண்டி அக் கலைவாணியாக வைத்து வழிபடுதலினும், ஞானக் கலையை வேண்டி அவளை ஞான வாணியாக வைத்து வழிபடுதலே சிறந்ததாகும். வாணியை, 'சகல கலாவல்லி' என்று கூறிய குமரகுருபர அடிகள், பல கலைகளை வேண்டி அவளை வழிபடுபவர்கட்கும் பயன்படும் வண்ணம் தமது சகல கலாவல்லி மாலையை அருளிச்செய்து, இறுதியில் ஞான கலாவல்லியாக வைத்து ஞானக் கலையை வேண்டுகின்ற குறிப்பையே வைத்திருத்தல் அறியத்தக்கது.

முதலில் அடிகள் பொருட்சுவை சொற்சுவைகள் தோய்ந்த, 'ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம்' என்னும் நால்வகைக் கவிகளையும் பாடும் திறன் வேண்டும்; தமிழாகிய அமுதத்தைச் சுவைக்கும் திறன் வேண்டும்; அகத்திணைத் துறை, புறத்திணைத்துறை வகையில் அமைந்த பழந்தமிழ் இலக்கியங்களை உணரும் ஆற்றலும், நயம்படப்பேசும் நாவன்மையும் வேண்டும்; 'இயல், இசை, நாடகம்' என்ற முத்தமிழிலும் பயிற்சி வேண்டும்; பாட்டுக்களும், அவற்றின் பொருள்களும் தெரிந்தால்மட்டும் போதாது; அக்கல்வியால் ஆய ஒழுக்கமும் அமைய உனது அருள் நோக்கம் வேண்டும்; அட்டாவதானம், சோடசாவதானம் முதலிய அற்புதக் கலைகளுடன், கற்றவைகளை நல்ல சொல்வன்மையால் எடுத்து விளக்கும் திறனும் வேண்டும்' என்றெல்லாம் சொல்லிவந்தவர், முடிவாக, 'கலைகளில் அமைந்த சொற்களுக்கும், பொருள்களுக்கும் உயிராய் உள்ளது மெய்ஞ்ஞானமே. அந்த மெய்ஞ்ஞானத்தின் வடிவமே நீ : ஆகையால், உனது உண்மை நிலையை உணர்ந்து அந்த நெறியில் உன்னை நினைத்தும், வாழ்த்தியும், வணங்கியும் பயன் பெறுகின்றவர்கள் யார் இருக்கின்றார்கள் !' என்று கூறினார். ஆகவே, 'அடிகள் உண்மையில் வாழ்த்தியது ஞான வாணியையே' என்பது நன்கு புலப்படுகின்றது. "மண்கண்ட வெண்குடைக் கீழாக" என்ற பாட்டு அப்பொழுதைக்கு வேண்டிய ஒரு பயன் குறித்தது. அடிகள் வாணியை இந்த உயர்நிலையிற் பாடிய காரணத்தால், மற்றைய பிற பயன்கள் அப்பொழுதே அவருக்குக் கைகூடின.

கலைமகள், சிவபெருமானது திருவருளைப் பெற்றவரது நாவில் ஞானவாணியாய்த் தானே சென்று தங்குவாள் என்பதைப் பரஞ்சோதி அடிகள் தமது திருவிளையாடற் புராணத்தில் திருவாதவூரடிகளை இறைவன் ஆட்கொண்டபொழுது,

"ஞான வாணிவந்து இறுத்தனள் அன்பர்தம் நாவில்"

என்று கூறி, அடிகள் வாக்கினின்றும் திருவாசகமாகிய ஞானப் பாடல்கள் வெளிவந்தமையை விளக்குகின்றார். ஞான வாணியாய் நின்று ஞானக் கலைகளையும், ஏனைக் கலைவாணியாய் நின்று பிற கலைகளையும் தரவல்லவளாகிய வாணியை வழிபடுதற்குரிய சிறந்த மகா நவமிநாளும் வருகின்றது.

அனைவரும் அவளை நன்கு வழிபட்டு அனைத்துக் கலைகளுடன் ஞானக் கலையையும் பெற்றுத் திகழ்வோமாக

சொற்கும் பொருட்கும் உயிராம்மெய்ஞ் ஞானத்தின் தோற்ற [மென்ன
நிற்கின்ற நின்னை நினைப்பவர் யார்நிலந் தோய்புழைக்கை
நற்குஞ் சரத்தின் பிடியோ டரசன்னம் நாண நடை
கற்கும் பதாம்புயத் தாளே! சகல கலாவல்லியே!

---

உ

குருபாதம்

குருவருள்

# தோத்திரமும் சாத்திரமும்

## தோடும் குழையும்

இயற்கையில் உருவம் இல்லாதவனாகிய இறைவன் உருவம் இல்லாமலே தான் செய்யக் கருதும் செயல்களை நினைவு மாத்திரத்தால் செய்தல் கூடும். ஆயினும், உருவம் கொள்ளாவிடில் ஆன்மாக்கள் தன்னை நினைப்பதும், வாழ்த்துவதும், வணங்குவதும் இயலா என்பதனாலும், சில உண்மைகளை உருவங்கொண்டு கட்புலனாகி உணர்த்தினாலொழிய உயிர்கள் நன்கு உணரமாட்டா; அதனால், அவ்வாறு உணர்த்தல் வேண்டும் என்பதனாலும் அவன் பலவகை வடிவம் கொள்கின்றான். இதனை,

> " ஆரணம் ஆகமங்கள் அருளினால் உருவு கொண்டு
> காரணன் அருளான் ஆகில் கதிப்பவர் இல்லையாகும்;
> நாரணன் முதலாய் உள்ள சுரர் நரர் நாகர்க்கெல்லாம்
> சீரணி குருசந் தானச் செய்தியும் சென்றிடாவே "

எனச் சிவஞான சித்தி விளக்குகின்றது. எனவே, இறைவன் தன்பொருட்டன்றி உயிர்களின் பொருட்டே பலவகை உருவங்களைக் கொள்கின்றான் என்பது தெளிவு.

உயிர்களின்பொருட்டு இறைவன் கொள்ளும் உருவங்கள் உயிர்கட்குத் தரப்படுகின்ற உடப்புகள்போல மாயா வடிவங்கள் அல்ல. 'விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர்' என உயிர்கள் மூன்று வகைப்படுகின்றன. அவை அனைத்தின் உடம்புகளும் மாயையின் காரியங்களே. அஃதாவது, விஞ்ஞானகலரது உடம்பு சுத்தமாயையிலும், பிரளயாகலரது உடம்பு அசுத்த மாயையிலும் சகலரது உடம்பு பிரகிருதி மாயையிலும் தோன்றுவன இறைவன் கொள்ளும் வடிவங்கள் இவற்றில் ஒன்றல்ல. அனைத்தும் அவன் தனது சக்தி

யால் கொள்ளும் அருள் திருமேனிகளே. திருமேனிகள் மட்டுமல்ல; அவற்றில் காணப்படும் ஆடை, ஆபரணம், படைக்கலம் முதலியனவும் அருளுருவங்களே. அவைமட்டு மல்ல; அவன் இருக்கின்ற அல்லது இயங்குகின்ற இடமும் அருள்மயமே. இவற்றையும் சிவஞான சித்தி,

“ உருஅருள் ; குணங்க ளோடும்
உணர்வரு ளுருவில் தோன்றும்
கருமமும் அருள் ; அரன்றன்
கரசர ணாதி சாங்கம்
தரும்அருள் ; உபாங்க மெல்லாந்
தான்அருள் ; தனக்கொன் றின்றி
அருள்உரு உயிருக் கென்றே
ஆக்கினன் ; அசிந்தனன்றே ”

என விளக்குகின்றது.

இவ்வாறு அவன்கொள்ளும் உருவங்கள் பலவும், ‘ போக வடிவம், வேக வடிவம், யோக வடிவம் ’ என மூன்று வகையில் உள்ளன. அவற்றுள் போக வடிவங்கள், உயிர்களுக்கு உலக இன்பத்தைத் தருதற்பொருட்டுக் கொள்ளப்படுவன. அவை, உமாமகேசுரர், கல்யாணசுந்தரர், சோமாஸ்கந்தர், கசமுகா னுக்கிரர், சக்கரப்பிரதானர் முதலாகப் பல. இவைகளை இறைவன் உயிர்களின் பொருட்டே கொள்கின்றான் என்பதை அறியாமல் சிலர் இறைவனும் நம்மைப்போலவே மணம் புரிந்து வாழ்க்கை நடத்தி மக்களைப் பெறுபவனாதல் கூடுமோ என்பர்.

வேக வடிவங்கள் குற்றம் புரிபவரை ஒறுத்தற்குக் கொள் ளப்படுவன. அவை திரிபுரசம்மாரர், காலசம்மாரர், கசசம் மாரர் முதலியன. இவை குற்றம் புரிபவரை ஒறுக்கும் முகத் தால் அவர்களது பாவங்களை ஒழிப்பனவேயன்றி வேறில்லை. இதனை அறியாதவர் இறைவனுக்கும் நம்மைப்போலக் கோப மும், பகையும் இருத்தல் கூடுமோ என்பர்.

யோக வடிவங்கள் உயிர்களுக்கு அஞ்ஞானத்தைப்போக்கி மெய்ஞ்ஞானத்தைத் தருதற்பொருட்டுக் கொள்ளப்படுவன. அவை, தென்முகக் கடவுள், நடராசர், பிட்சாடனர் முதலி யவை. பிட்சாடன வடிவமும் “ இரப்பவர்க்கு ஈய வைத்தார்,

ஈப்வர்க்கு அருளும் வைத்தார்" என்ற உண்மையையும், "ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு" என்ற உண்மையை விளக்குதற்குக்கொண்ட வடிவமே,

சிவபெருமான் இவ்வாறு கொள்ளும் போக வடிவம், வேக வடிவம், யோக வடிவம் அனைத்திலும் அம்மையோடு உடனாகியே இருப்பன். தென்முகக்கடவுள், பிட்சாடனர் முதலிய வடிவங்களில், புராணக்கொள்கையைஒட்டி அம்மையை வெளிப்படையாக வைத்து வழிபடாவிடினும், அவ்விடங்களிலும் அம்மை உடன் இருக்கின்றாள் என்பதே கருத்து. அம்மையை விட்டு அப்பனோ, அப்பனைவிட்டு அம்மையோ எங்கும் இருப்பதேயில்லை. அம்மைகோயில் தனியாக உள்ள இடத்திலும் அப்பன் உடன் இருக்கின்றான் என்பதுதான் கொள்கை.

" மதிநுதல் மங்கை யோடு வடபா லிருந்து
மறையோதும் எங்கள் பரமன் "

" நானும்என் சிந்தையும் நாயகனுக் கெவ்விடத்தோம்
தானும்தன் தையலும் தாழ்சடையோன் ஆண்டிலனேல் "

என்பனபோன்ற அருட்டிருமொழிகள் யோக வடிவத்திலும் அம்மை உடன் இருத்தலை விளக்கும். போக வடிவத்தில் அம்மை போக சத்தியாய் இருந்து போகத்தையும், யோக வடிவத்தில் அம்மை ஞான சத்தியாய் இருந்து ஞானத்தையும் உயிர்கட்கு வழங்குவாள். அதனால் அவள் இன்றி அவன் எங்கும் இல்லை. அவன் இன்றியும் அவள் எங்கும் இல்லை. எவ்விடத்தும் அவ்விருவரும் பிரியாமலே இருப்பர் என்ற உண்மையை விளக்குவது மாதொரு கூறனாய அர்த்தநாரீசுர வடிவம். அதனால், அது, 'முன்னர்க் கூறிய அனைத்து வடிவங்கட்கும் முதலாய வடிவம்' எனப்படுகின்றது. அவ் வடிவத்தைத் திருமுறைகள் தனிச் சிறப்புடையதாக எடுத்துக் கூறும்.

" தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும்உடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ "

என்னும் திருவாசகம் மாதிருக்கும் பாதியனாய வடிவத்தைப் பலபட எடுத்து விளக்கி, அதனை, 'தொன்மைக் கோலம் –

ஏனைய எல்லா வடிவங்கட்கும் முற்பட்ட வடிவம்' எனப் போற்றுகின்றது. "உவமையிலாக் கலைஞானம், உணர்வரிய மெய்ஞ்ஞானம்" என்னும் இருஞானங்களையும் தமக்கு ஒருங்கே வழங்கியருளிய வடிவமும் இத்தன்மைத்தாய் இருந்ததைத் திருஞானசம்பந்தர் தாம் திருப்பதிகம்பாடத் தொடங்கிய முதல் தொடரிலேயே குறிப்பிடுகின்றார். அஃதாவது, "தோடுடைய செவியன்" என்று தொடங்கிப் பாடியருளுகின்றார்.

தோடு, பெண்கள் அணியும் காதணி. ஆடவர் அணியும் காதணி குழை. இவ்விரண்டில் மாணிக்கவாசகர் தமக்குக் குருவாகி வந்து ஞானத்தைக் கொடுத்த அப்பனுக்குரிய குழையை முதலிற் காண்கின்றார். ஞானசம்பந்தர் தமக்கு ஞானப்பாலைக் கொடுத்த அம்மைக்குரிய தோட்டினை முதலிற் காண்கின்றார். எனினும் ஞானசம்பந்தர், 'தோடுடைய செவியள்' எனப் பெண்பாலாகக் கூறாமல், "தோடுடைய செவியன்" என்று ஆண்பாலாகக் கூறியதிலிருந்து அம்மையும், அப்பனும் வேறு வேறாய் இல்லாமல், ஒருவராகவே இருத்தலைக் காண்கின்றார் என்பது விளங்குகின்றது.

இனித் திருநாவுக்கரசர், "நாம் ஆர்க்கும் குடி அல்லோம்; நமனை அஞ்சோம்" என்னும் திருத்தாண்டகத்தில் சிவபெருமானை, 'தாம் ஆர்க்கும் குடியல்லாத் தன்மையான சங்கரன், நற் சங்க வெண்குழை ஓர்காதிற் கோமான்" என்று ஒரு காதில்மட்டுமே குழையை அணிந்தவனாகக் குறிப்பிடுகின்றார். 'ஒருகாதில் குழை உளது' எனவே, மற்றொரு காதில் தோடு உளது என்பது அப்பர் வாக்கில் பெறப்படுகின்றது. ஞானசம்பந்தரது வாக்கில் "தோடுடைய செவியன்" என ஆண்பாலாகக் கூறினமையால், ஒருகாதில் தோடும், மற்றொரு காதில் குழையும் இருத்தல் பெறப்படுகின்றது. மேற்குறித்த திருவாசகத்தில் தோடும், குழையும் வெளிப்படையாகவே எடுத்துச் சொல்லப்பட்டன. வலப்பால் அப்பனும், இடப்பால் அம்மையுமாய் இருத்தலால் வலக்காதில் குழையும், இடக்காதில் தோடும் இருத்தல் அறியப்படும்.

அம்மையும் அப்பனும் ஒருவரேயாய் இருத்தலைத் திருநாவுக்கரசர், "உருவிரண்டும் ஒன்றோடொன் றொவ்வா அடி" என்று அவர்தம் திருவடிகளின் இயல்பைக் குறிக்குமுகத்தால் விளக்குகின்றார். திருவாசகத்தில் ஒரளவு வகுத்துக் கூறப்பட்ட மாதிருக்கும் பாதியனாய வடிவத்தின் இயல்பைப்

பட்டினத்தடிகள் தமது திருவிடைமருதூர் மும்மணிக்கோவை யில் முதல் திருவகவலிலே விரித்துரைக்கும் பான்மை மிக அழகிது.

இங்ஙனம் கூறப்படும் இத்திருவடிவமே இறைவனது இயல்பை இனிது விளக்கும் சிறப்பு வடிவமாதல் நோக்கி, "அம்மையப்ப ரேஉலகுக்கு அம்மையப்பர் என்றறிக" என்றது திருக்களிற்றுப்படியார்.

"முதல் உருப் பாதிமாதர் ஆவதும் உணரார்"

எனச் சிவஞான சித்தியும் இம் மாதொருகூறனுய வடிவத்தை 'முதல் உரு' எனக் குறிப்பிடுகின்றது.

இத் திருவுருவம், 'முதற்பொருள் ஒன்றேயாய், 'சிவம், சத்தி' என இருதிறப்பட்டுப் பிரிவின்றி நிற்கும்' என்னும் உண்மையை உணர்த்தும் என்பதையே "அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர்" என்று திருக்களிற்றுப்படியார் குறிப் பிடுகின்றது. முதற்பொருள் இவ்வாறு இருதிறப்பட்டுப் பிரிவின்றிநிற்றலை அந்நூல், பின்னும்,

"தாரத்தோ டொன்ருவர், தாரத்தோர் கூருவர்;
தாரத்தோ டெங்குந் தலைநிற்பர்"

என்பதனுல் விளக்கிற்று. சிவஞான சித்தி, "இத்திருவுரு வமே முதல் உருவம் என்பது, உலகம் முழுதும் 'ஆண், பெண்' என்னும் இருகூருய் அமைந்தவாற்ருல் அறியப் படும்" என்பதைக் குறிப்பிக்கின்றது. அக்கருத்தே திருக் களிற்றுப்படியாரிலும், "எவ்வுலகில் எத்திறமும் – மாதேயும் பாகன் இலச்சினையே" எனக் காணப்படுகின்றது. இலச் சினை – முத்திரை; அடையாளம். இவ்வாறு முதற்பொருளின் இயல்பை உள்ளவாறுணர்த்துதற்குக் கூறும் மாதொரு கூருய வடிவத்தின் இயல்பு அனைத்தையும் குறிக்கும் குறிப்பாக அமை வனவே, சிவபெருமானது திருச் செவிகளில் உள்ள தோடும், குழையும்' எனவே, அவற்றை எடுத்து ஓதும் திருமுறை களாகிய தோத்திரப் பாடல்களின் ஆழ்ந்த நுட்பத்தை மேற் காட்டிய சாத்திரங்களைக் கொண்டே உணர்தல் வேண்டும். மக்கள் அவ்வுணர்வைப் பெற்று உய்ய அம்மையப்பர் அருளுவாராக.

# திருவருட்பயன் விளக்க உரை

( மலர் 29. இதழ் 10. பக்கம் 564 இன் தொடர்ச்சி )

ஐந்தாவது குறள்,

அருவு முருவு மறிஞர்க் கறிவா
முருவு முடையா னுளன்

என வரும்.

இதன்பொருள் : உடையான் - எப்பொருளேயும் உடைய முதல்வனுகிய இறைவன் ; அறிஞர்க்கு அறிவாம் உருவும் - மெய்யுணர்வினே உடைய பெரியோர்க்கு அறிவே உருவாய திருமேனியையும் ; அருவும், உருவும் - ஏனேயோர்க்கு அருவத் திருமேனியையும், உருவத் திருமேனியையும் ; உளன் - உடையவன்.

விளக்கம் : பின்னர், ''அறிஞர்க்கு'' என்றதனுல், முன்னர். ஏனேயோர்க்கு' என்பது பெறப்பட்டது. அருவத் திருமேனியாவது, கட்புலனுகாது, கருத்தினுற் கருதியும், மெய்ந்நூல்களால் தெளிந்தும் உணரப்படுவது. அஃது உயிர்களிடத்து, 'சூக்குமை' என்னும் வாக்கு வடிவாய் நின்று அவற்றிற்கு உணர்தல் தன்மையை உண்டாக்கும் நிலே. இந் நிலே 'நாதம், விந்து' என இரண்டாகச் சொல்லப்படும்.

இந் நாத விந்துக்களே தூலம் (பருமை) என வைத்து, 'அவற்றிற்கு முன்னே சூக்குமமாய (நுட்பமாகிய) 'சிவம், சத்தி' என்னும் இருநிலேகள் உள்ளன' என ஆகமங்கள் கூறும். அவையும் அருவத் திருமேனிகளே. அதனுல், 'சிவம் சத்தி, நாதம், விந்து' என அருவத் திருமேனிகள் நான்கு என அறிக.

இனி உருவத்திருமேனியாவது கட்புலனுய், முகம், கை, கால் முதலிய உறுப்புக்களுடன் காணப்படும் வடிவம். இவ்வாறு நம்மனேர் கண்ணிற்குக் காணப்படாவிடினும், தவத்தோர் கண்ணிற்குக் காணப்படும். உருவத் திருமேனி, மேற்

குறித்த ஐந்தொழில்களுள் அருளல் தவிர, ஏனைய நான்கு தொழில்களையும் செய்யும் நிலையில் கொள்ளப்படுவன. அவையே, 'அயன், மால், உருத்திரன், மகேசுரன்' என்னும் பெயருடையனவாம். ஆகவே, உருவத் திருமேனிகள் நான் காதல் அறிக.

அருவமும், உருவமும் கூறிய அதனால் இடைநிற்கும் அருவுருவமும் கொள்ளப்படும். அருவுருவத்திருமேனியாவது, முகம் முதலிய உறுப்புக்களுள் யாதும் இன்றிப் பிழம்பு மாத்திர மாய்க் காணப்படுவது. இஃது ஒளி அல்லது சுடர் வடிவமே. முகம் முதலிய உறுப்புக்கள் இன்மையால் 'அருவம்' எனவும், கட்புலனாய்த் தோன்றலால் 'உருவம்' எனவும் சொல்லப்படும் இருதன்மைகளையும் இஃது உடையதாம். இன்னும் இது சுடர் வடிவேயாகலின், ஏனை மகேசுரன் முதலியனபோல நின்றாங்கு நில்லாது ஒரோருகாலே தோன்றிப் பின் தோன்றாது நிற்பதாம். அதனாலும் இஃது அருவுருவமாகின்றது. இத் திருமேனி சிவாலயங்களில் மூலத்தானத்தில் உள்ள இலிங்கத் திருமேனியே. இதுவே, மேற்கூறிய ஐந்தொழில்களுள் அருளலைச் செய்வது. அதனால் அருவுருவத் திருமேனி இஃது ஒன்றேயாம். இத்திருமேனி, 'சதாசிவ மூர்த்தி' எனப் பெயர் பெறும்.

முதலில் உள்ள அருவத் திருமேனிகள் நான்கு. இறுதி யில் உள்ள உருவத் திருமேனிகள் நான்கு இடையில் உள்ள அருவுருவத் திருமேனி ஒன்று, ஆக ஒன்பதும், 'நவந்தருபேதம்' எனப்படும். இதனை,

"சிவம்சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன்
உவந்தருள் உருத்தி ரன்தான் மாலயன் ஒன்றின்ஒன்றாய்ப்
பவந்தரும்; அருவம் நால்இங் குருவம்நால் உபயம் ஒன்றாய்
நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர்" †

என்னும் சிவஞான சித்தியால் அறிக.

அருவமாய் நிற்கின்ற யாதொரு பொருளும் உருவமாய் வடிவுபெறும் பொழுது இடையே அருவுருவாய் நின்றே பின்

---

† சூ. 2. 74.

உருவமாகும். இது வித்தின்கண் அருவமாய் இருந்த மரம், பின் உருவமாகுங்கால், இடையே 'முளை' என்னும் அருவுருவ நிலையில் நின்று பின்பே உருவமாதலால் அறியப்படும். அதனுல், 'சிவம், சத்தி, நாதம், விந்து' என்னும் அருவ நிலையில் உள்ள இறைவன், பின்பு, 'மகேசுரன், உருத்திரன், மால், அயன்' என உருவநிலையில் வருங்கால், இடையே 'சதாசிவன்' என்னும் அருவநிலையில் நின்றே வருபவனு வான். ஆகவே, 'அருவம், உருவம்' என்பவற்றேடு, 'அருவுருவம்' என்பதொன்றும் இடையே உளதாதல் அறிந்து கொள்க. 'அருவம், அருவுருவம், உருவம்' என்னும் இவையே இறைவனது 'மூவகைத் திருமேனிகள்' எனப் படுவனவாம்.

'இவையெல்லாம் இறைவன் மெய்யுணர்வு பெருதார் பொருட்டுக்கொள்ளும் திருமேனிகள்' எனவும், 'மெய்யுணர்வு பெற்ருர்க்கு அவன் அறிவே வடிவாய் விளங்குகின்ருன்' என வும் கூறிய அதனுல், 'இம்மூவகைத் திருமேனிகளும் பிறர் பொருட்டுக் கொள்ளும் பொது வடிவங்கள்' என்பதும், 'அறிவே வடிவாய் நிற்றலே அவனது உண்மை நிலை' என் பதும் விளங்கும். விளங்கவே, 'இறைவனது நிலை இங்ஙனம் பொது, உண்மை என இரண்டாகி நிற்கும்' என்பது அறியப் படும்.] பொதுநிலை, 'தடத்தம்' என்றும், உண்மைநிலை 'சொரூபம்' என்றும் சொல்லப்படும். அவ்வாற்ருல், இறைவன் உண்மை நிலையில் நிற்கும்பொழுது 'சொரூப சிவன்' என்றும், தடத்த நிலையில் நிற்கும்பொழுது 'தடத்த சிவன்' என்றும் சொல்லப்படுவான். 'பரசிவன், பரமசிவன், சுத்த சிவன்' என்பன எல்லாம் சொரூப சிவனையே குறிக்கும். உண்மைநிலை, 'தன்னிலை' என்றும் சொல்லப்படும். இவற் றுள் இறைவனது உண்மை நிலை மெய்யுணர்ந்தார்க்கே அறிதல் கூடுவதாகலானும், அதனை அறிந்தபின் அவர் அதன் இன்பத்தையே நுகர்ந்துநிற்றலல்லது பிறிதொன்றனை விரும்பாராகலானும், 'அறிஞர்க்கு அறிவாம் உருவம் உளன்' என்றும், ஏனையோர் அதனை உணரமாட்டாமையின் அவர் உணருமாற்ருல் மூவகைத் திருமேனிகளை இறைவன் கொள் கின்ருன் என்பதுபற்றி, 'ஏனையோர்க்கு அவைகளை உளன்' என்றும் கூறினுர். இதனுள் மலவாதனை மட்டுமே உடைய வரும் மலம் உடையவர் போலச் சொல்லப்பட்டனர் என்க.

'உளன்' என்பது, 'உடையன்' என்னும் பொருட்டாய் நின்றது. 'அறிஞர்க்கு அறிவாம் உருவம் உடையான்' எனப் பாடம் ஓதி, அதனை உடம்பொடு புணர்த்தலாக்கியும் உரைப்ப.

இதனால், மேற்கூறியவாறு ஐந்தொழில் செய்யும் இறைவன் அவற்றின் பொருட்டுக் கொள்ளும் வடிவங்களும், வடிவம் அற்ற அவனது உண்மை இயல்பும் கூறப்பட்டன.

ஆருவது குறள்,

பல்லா ருயிருணரும் பான்மையென மேலொருவ
னில்லாதா னெங்க ளிறை

என வரும்.

இதன்பொருள்: பல் ஆர் உயிர் உணரும் பான்மை என - பலவாய் நிறைந்த உயிர்கள், ஒன்றனைத் தாமே அறிய மாட்டாது, தம்மை அறிவித்தற்குத் தமக்கு மேலோன் ஒருவனை உடையனவாய் இருத்தல்போல; எங்கள் இறை - எங்கள் கடவுள்; மேல் ஒருவன் இல்லாதான் - தன்னை அறிவித்தற்குத் தனக்கு மேலானவனாக ஒருவனை உடையனல்லன்.

விளக்கம்: எனவே, 'தானேஎல்லாவற்றையும், அறிதலும் உயிர்களுக்கு அறிவித்தலும் செய்வன்' என்பதாம். "உணரும் பான்மை" என்பது, 'உணர்தற்கு ஒருவனை உடையனும் பான்மை' என அதன் காரணத்தின்மேல் நின்றது. 'ஒருவனை' என்னும் இரண்டாம் உருபு, தொகுக்கும்வழித் தொகுத்தலாயிற்று

"மேல் ஒருவன்" என்றது பண்புத்தொகை, "இல்லாதான்" என்றதில் இன்மை, உடைமைக்கு மறுதலையாயது. இதனானே முதற் குறளில் "நிகரில் இறை" என்றதனால், 'தன்னோடு ஒப்பதொருபொருள் இல்லை' என்றதனோடு, 'தன்னின் மிக்கதொரு பொருளும் இல்லை' என்பதும் பெறப் பட்டது. அதனால், 'ஒப்பாரும், மிக்காரும் இல்லாத தனிப் பெருந்தலைவன் இறைவன்' என்றதாயிற்று.

தானே அறிந்தும், அறிவித்தும் நிற்பதே சுதந்திர அறிவாம். அவ்வாறில்லாது பிறர் அறிவிக்க அறிவது சுதந் திரம் இல்லாத அறிவாகும். அவற்றுள், 'இறைவன் சுதந்திர அறிவுடையவன்' என்பது இதனால் கூறப்பட்டது. அதனை விளக்குதற்கு உயிர்களது அறிவு சுதந்திரம் இல்லாதது என்பதும் ஈண்டே கூறப்பட்டது.

ஏழாவது குறள்,

ஆனா வறிவா யகலா னடியவர்க்கு
வானாடர் காணாத மன்

என வரும்.

இதன்பொருள்: வான் நாடர் காணாத மன் - தேவரால் அறியப்படாத தலைவனாகிய கடவுள்; அடியவர்க்கு - தனக்குத் தொண்டராயினார்க்கு; ஆனா அறிவாய் அகலான் - அவர் அறிவினின்றும் நீங்காத அறிவாய் அவருடனே இருப்பான்.

விளக்கம்: ஆனாமை - நீங்காமை. நீங்கற்பொருள் வருவிக்கப்பட்டது. அகலுதல், சேய்மையனாதல். 'அறிவுக் கறிவாய் அகலான்' எனவே, 'அவரால் எஞ்ஞான்றும் அறியப் பட்டு நிற்பான்' என்றதாயிற்று. நிலவுலகில் உள்ள பிறப் புக்களில் மக்கட்பிறப்பை எய்தினோரே உயர்ந்தவர் ஆதலாலும், அவரால் உயர்ந்தவராக வழிபடப்படுவோர் தேவர் ஆதலாலும், அத்தேவரால் அறியப்படாமையையே எடுத்துக் கூறினார். கூறவே, மக்கள் முதலிய பிறப்பில் நிற்கும் பிற உயிர்களால் அறியப்படாமை தானே அமைந்தது. இனி 'அடியார்' என்பவரும் மேற்கூறிய தேவரினும், மக்களினும் உள்ளா ரன்றி வேறல்லாராகவும், 'அவர்க்கு அறிவுக்கறிவாய் அக லான்' என்றமையால், 'இறைவன் அறியப்படுதலும், படாமை யும் பிறப்பானாதல், பிறவற்றானாதல் ஆவனவல்ல; தொண்ட ராய் நிற்றலும், நில்லாமையுமாகிய தகுதி தகுதிஇன்மை களான் ஆவனவே' என்பது பெறப்பட்டது

"யாவ ராயினும் அன்ப ரன்றி
அறியொ ணாமலர்ச் சோதியான்" $

---

$ திருவாசகம் - சென்னிப்பத்து - 1.

"கனவிலும் தேவர்க்கு அரியாய் போற்றி
நனவிலும் நாயேற் கருளினை போற்றி" *

"காண்டற் கரிய கடவுள் கண்டாய்;
கருதுவார்க்கு ஆற்ற எளியான் கண்டாய்" ‡

என்றாற்போலும் அருட்டிருமொழிகள் யாவும் இக்கருத்தையே விளக்குவனவாதல் அறிக.

இதனால், 'இறைவன், அகர உயிர்போல் அறிவாகி எங்கும் நிறைந்தும், மூவகைத் திருமேனி கொண்டும், அனைத்துயிர்க்கும் அறிவித்தும் அடியவர் உள்ளத்தில் விளங்கியும், பிறவிடத்தில் விளங்காதும் நிற்பன்' என்பது கூறப்பட்டது. இதனானே, 'அவனை அறிதற்கு வழி, அவனுக்குத் தொண்டு பூண்டு நிற்றலே' என்பதும் கூறப்பட்டதாம். தொண்டு பூண்டு நிற்றலாவது, 'மனம், மொழி, மெய்' என்னும் முக்கருவிகளாலும், அறிவு, இச்சை செயல்களாலும் தம் வழி நில்லாது அவன்வழி நிற்றலாம்.

---

* திருவாசகம் - போற்றி - 143 - 44.

‡ திருமுறை - 6. 23. 1.

ஆவணிமூல விழாவில் :

## ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் அருளிய

# ஆசியுரை*

ஆலந் தரித்தலிங்கம் ஆலவாய்ச் சொக்கலிங்கம்
மூலமாய் எங்கும் முளைத்தலிங்கம் — பாலொளியாம்
மத்தனே கூடல் மதுரா புரிஉமையாள்
அத்தனே ஆலவா யா.

சிவநேசச் செல்வமும் திருநெறிப்பற்றும் மிக்க மெய்யன்பர்களே!

உங்கள் அனைவர்க்கும் எங்கள் ஆதிபரமாசாரியர் ஸ்ரீ குரு ஞானசம்பந்தரது அருள் திருநோக்கமும், செந்தமிழ்ச்சொக்கன் திருவருள் நலமும் மிகுவனவாகுக,

இன்றைய நாள் நமது வாழ்வில் ஒரு பொன்னாள். இறைவன் மாணிக்கவாசகர் பொருட்டு மதுரைத் திருவீதியில் குதிரைச் சேவகனாய் வந்து குதிரை விற்றும் அம்மாநகரில் பிட்டு விற்றுப் பிழைத்த ஆதரவற்ற நரை மூதாட்டியாகிய ஒரு செம்மனச் செல்வியான அடியவள் பொருட்டுக் கூலியாளாய் வந்து மண் சுமந்தும் தனது எளிவந்த கருணைப்பெருக்கைக் காட்டியருளிய நன்னாள் இந்நாளே. செம்மனச் செல்வியின் அன்பிற்குக் கட்டுப்பட்டு இறைவன் மண் சுமந்ததை,

" அரும்பிட்டுப் பச்சிலையிட் டாட்செய்யும் அன்னையவள்
தரும்பிட்டுப் பிட்டுண்டாய் தலையன்பிற் கட்டுண்டே"

என்று பாராட்டுகிறார் குமரகுருபரர்.

இக்கருணையாளனாகிய ஆலவாய்ச் சொக்கலிங்கனே எங்கள் ஆதி பரமாசாரிய மூர்த்திகட்கு முற்பிறவி தொட்டு

---

*திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் சாதாரண ஆண்டு (10—9—70) ஆவணிமூலத் திருவிழாவில் வழங்கியருளியது.

ஆன்மார்த்த மூர்த்தியாய் இப்பிறவியில் இளமையில் மதுரைப் பொற்றாமரைத் தீர்த்தத்தில் கண்ணுக்கினிய பொருளாகி அவர்கள் கரத்தில் வந்து அமர்ந்தருளி இவ்வாதீனத்தில் என்றும் விளங்கிப் பூசையேற்றருளுகின்றான். எனவே, இவ் ஆவணிமூலத் திருவிழா அப்பெருமானுக்கு ஏற்புடைப் பெரு நாளாகின்றது.

இன்றைய ஆவணிமூல விழாவில் நம் தமிழ்நாடு இந்து அறநிலைய ஆணையர் உயர்திரு கே. எஸ். நரசிம்மன் பி. ஏ., பி. எல், ஐ ஏ. எஸ்., அவர்கள் வருகைதந்து சிறப்புரையாற்று வது நம் அனைவர்க்கும் மகிழ்ச்சியைத்தரத்தக்க செய்தியாகும். ஆணையர் அவர்கள் நமது சைவத் திருமுறைகளில் பற்று மட்டுமன்று, சிறந்த ஆராய்ச்சியும், அவற்றின் சிறப்பைக் கேட்பவர் உளங்கொள நன்கு எடுத்து விளக்கும் பேச்சாற்ற லும் படைத்தவர்கள். நமது திருக்கோயில்கள் தூய்மையும், நல்ல ஒழுங்கு முறைகளும் உடையனவாய் இருத்தல் வேண் டும் என்பது மட்டுமன்றி, அவைகளில் நித்திய நைமித்தியங் களாகிய வைதிக கர்மங்கள் முறைப்படி தவறாது நடைபெறல் வேண்டும் என்னும் ஆர்வம்மிக்கவர்கள். அதன்பொருட்டுச் சிறிது பொருட் செலவு அதிகமாயினும் அஃது ஏற்கத்தக்கதே என்று கருதி அதற்கு ஆவன செய்பவர்கள். இவர்களுக்குள்ள மிக்க சமயப் பற்றுக் காரணமாக அப்பர் சுவாமிகள் செய்த உழவாரப் பணியைத் தாமும் செய்துகாட்டி, பிறரும் செய்தல் வேண்டும் என்ற கருத்தை வெளியிட்டபடி, தமிழ்நாடு தெய் விகப் பேரவையின் சார்பில் பல உழவாரப் படைகள் ஆயத்த மாகியிருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. இத்தகைய பெரு மகனார் இன்று வருகை தந்து இவ்விழாவைச் சிறப்பிப்பது பலர்க்கும் மகிழ்ச்சியைத் தருகின்றது.

ஆலவாய்ப் பெருமான் சங்கத்திருந்து தமிழ் வளர்த்த தண்ணருளாளன என்பது பலரும் அறிந்தது. அவன் நற்கன கக் கிழி தருமிக்கு அளித்தற்பொருட்டு நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறிய இயற்புலவன். ஏழிசையாய் இசைப்பயனாய் நல்வீணை வாசிக்கும் இசைப்புலவன். இசைப் புலவராகிய பாணபத்திரர் பொருட்டு, இயற் புலவராயும், அரசராயும் விளங்கிய சேரமான்பெருமாள் நாயனாருக்குத் திருமுகம் கொடுத்தனுப்பி, இவன்,

" தன்போல் என்பால் அன்பன் "

என்று அவரை அறிமுகம் செய்வித்து, அவருக்கு 'மாண் பொருள் கொடுக்க' என்று மட்டும் அத்திருமுகத்தில் எழுதாமல், "மாண்பொருள் கொடுத்து வரவிடுப்பதுவே". அஃதாவது - 'இப்பாணபத்திரனைப் பொருள்கொடுத்து அங்கேயே அவைக்களத்து இசைவாணனாக நிறுத்திக்கொள்ளாமல் திருப்பி அனுப்புக' என்று எழுதிய குறிப்பை நாம் நினைவு கூர்தல் வேண்டும்.

"தன்போல் என்பால் அன்பன்" என்றது சேரமான் பெருமானைப் போலவே பாணபத்திரரும் தம்மிடம் மிக்க அன்பு செலுத்துபவர் என்று குறிப்பிட்டதாகும். இதனால், 'இசையிடத்தும் தன் அடியவரிடத்தும் சொக்கலிங்கப் பெருமான் எத்துணை விருப்பம் உடையவனாய் உள்ளான்' என்பது விளங்கும்.

சிவபெருமான் ஞானசம்பந்தருக்கும், நாவுக்கரசருக்கும் திருவீழிமிழலையில் பலநாள் படிக்காசு தந்ததைச் சுந்தரர், நித்தலும் தமிழ்கேட்கும் இச்சையால் கொடுத்ததாகக் குறிப்பிடுகின்றார். திருப்பூவணத்தில் வாழ்ந்த நாடக மகளாகிய பொன்னனையாள் என்னும் அடியவள் ஒருத்தியின் வறுமையைப் போக்குதற்பொருட்டுச் சோமசுந்தரப்பெருமான் சென்று இரசவாதம் செய்து, அவள் வீட்டிலிருந்த வெள்ளி, செம்பு முதலிய பாத்திரங்களை யெல்லாம் பொன்னாக்கிக் கொடுத்ததைத் திருவிளையாடற் புராணம் கூறுகின்றது.

இவ்வாறு இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழிலும் வல்லவர்கட்கு அவரவர்க்கு ஏற்ற முறையால் அருள் புரிந்த பெருமான் எங்கள் ஆலவாய்ச் சொக்கன் ஆதலின், ஆண்டு தோறும் நிகழும் ஆவணிமூலப் பெருவிழாவில் அப்பெருமானது திருவருள், தமிழில் வல்ல பல புலவர் பெருமக்களுக்குப் பட்டம், பரிசு முதலியவற்றைத் தந்து பெருமைப்படுத்துகின்றது; இன்னும் வடமொழி, வேதாந்த சித்தாந்த சாத்திரம் வல்லவர்களையும் சிறப்பித்துள்ளது.

மதுரைப் பெருமான் மண் சுமக்கும் கூலியாளாய் வந்ததுடன், பாண்டியனால் தனது நீற்றெழில் மேனியில் மாற்றடியும் பட்டுப் புண்சுமந்த பொன்மேனியனாயினான். அவன் எல்லாத் தத்துவங்கட்கும் மேலே உள்ள நாத தத்துவத்திற்கும் அப்பால் இருப்பவன். அவன், எல்லாத் தத்துவத்தினும் கீழ்ப்பட்ட பிருதிவி தத்துவமாகிய மண்ணுலகத்தில் வந்து, அந்த மண்ணைத் தலையில் சுமந்தது, தலையன்பிற் கட்டுண்டு அடியார்க்கு எளியனாகின்ற தன்மையைக் காட்டுவதுமட்டு மன்று: எத்துணை உயர்ந்தவராயினும் தம் கையால் பணி புரிந்து வாழவேண்டும் என்பதையும் காட்டுவதாகும்

'உழைப்பு வேண்டும்; உழைப்பே உயர்வைத்தரும்' என்றெல்லாம் உழைப்பைப்பற்றி வாய்ப்பறை சாற்றுதல் இக்காலத்தில் எங்கும மிகுதியாகக் கேட்கப்படுகின்றது. ஆனால். உண்மை உழைப்பு மிகுந்திருந்த அக்காலத்தில் இறைவனும் கூலியாளாய் வந்து மண் எடுத்துச் சுமந்தான். கூலிவாங்கிக் கொண்டு வேலை செய்யாமல் போவதோ அல்லது வேலை செய்யாமலே கூலிபெற நினைப்பதோ கூடாது என்பதற்காகவே இறைவன் பிட்டு விற்றவளிடம் முன் கூலி வாங்கி உண்டுவிட்டு வேலை செய்யாதவன்போலக் காட்டி, அதன் பயனாகப் பிரம்படி பட்டு மறைந்தான். ஆனால், ஒரு கூடை மண்ணினால் ஒப்புக்கொண்ட வேலையை முடித்தே மறைந்தான் ஆகவே அப்பெருமானது அருள், கல்வியிற் சிறந்தவர்களுக்கு மட்டுமன்றி நாட்டுப் பற்றுள்ள நல்ல தொண்டர்களையும் இவ் ஆவணிமூல விழாவில் பெருமைப்படுத்தியுள்ளது.

இவ்வாண்டில் செந்தமிழ்ச் சொக்கன் திருவருட் சிறப்பிற்கு உரியவராக இங்கு வந்திருப்பவர் நம் அன்பர் திரு. ந. சஞ்சீவி அவர்கள். இவர்தம் தந்தையார் திரு. நடேச முதலியார் அவர்கள் நமது திருச்சிராப்பள்ளி ஸ்ரீ மௌனமடத்தில் குருகுலவாசம்போல இருந்து தொடக்கக்கல்வி முதலாகக் கற்றுச் சிறந்த தமிழ்ப் பேராசிரியராய். முதலில் திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களுடன் திருச்சி பிஷப் ஹீபர் கல்லூரியிலும், பின்பு அர்ச் சூசையப்பர் கல்லூரியிலும் பல்லாண்டுகள் தமிழ்ப்பணி புரிந்தவர். சமயத்துறையில் திருப்பாதிரிப்புலியூர்த் தவத்திரு. ஞானியாரடிகள் மாணவராய்

விளங்கித் திருச்சியில் சமயப் பிரசாரங்களும் செய்துவந்தார். இவர்தம் தவப்புதல்வராய்த் தோன்றிய நம் திரு. சஞ்சீவி அவர்களும் 'மகனறிவு தந்தையறிவு' என்பதற்கேற்ப, இளமை முதலாகவே நுண்ணறிவுடையவராய்க் கல்விக்கூடங்களில் சிறந்த மாணவராய்த் திகழ்ந்து சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் உயர்தரக் கல்வி பயின்று பி. ஓ. எல். ஆனர்ஸ் தேர்வில் மாநிலத்திலேயே முதலாமவராகத் தேர்ச்சி பெற்றார். தமிழ்த்துறையில் சிறப்புற்று விளங்குபவர்களாகிய டாக்டர். மு. வரதராசனார், டாக்டர். பொ. அ துரையரங்கனார், திரு. அ. ச. ஞானசம்பந்தம், டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை முதலியோரிடமும் நன்முறையில் பயின்றவர் திரு. ந. சஞ்சீவி அவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இயற்கை மதிநுட்பத்தை நூலோடுடைய இவர் பின்னரும் பல பட்டங்களைப் பெற்றதில் வியப்பில்லை. புறநானூற்று ஆராய்ச்சியால் எம். லிட்., பட்டமும், தமிழ் இலக்கியச் சொல்லடைவு பொருளடைவு ஆராய்ச்சியால் பி. எச். டி., பட்டமும் பெற்றுள்ளார். தொடக்கத்திலேயே காஞ்சிபுரம் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவராய் விளங்கிப் பின் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியராகப் பணிபுரிந்த இவர், இன்று சென்னைப் பல்கலைக் கழகத்தில் துணைத் தமிழ்ப் பேராசிரியராய் விளங்குகின்றார்.

திரு. ந. சஞ்சீவி அவர்கள் சிறந்த நாவன்மை படைத்த பேச்சாளர். அதனோடு சிறந்த எழுத்தாளருமாவர். அதனால் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் வாழ்நாள் உறுப்பினராய் இருத்தலோடு, அச்சங்கத்தில் பல வகையில் பங்குபற்றிப் பணியாற்றி வருபவர். இவர் தம் எழுத்து வன்மையால் படைத்த ஆராய்ச்சி நிரம்பிய நூல்கள் பல. அவற்றுள், 'மருதிருவர்', 'மானங்காத்த மருதுபாண்டியர்' முதலிய சில நூல்கள் நம் பார்வைக்கும் வந்ததுண்டு. இவரது கட்டுரைகள் தமிழ்க் கலைக் களஞ்சியத்திலும் இடம் பெற்றுள்ளன. இவரிடம் அயல்நாட்டினரும் வந்து தங்கித் தமிழ் பயிலுதல் குறிப்பிடத்தக்க ஒரு செய்தி. சென்னை முதலிய பல இடங்களில் மாலை வகுப்பு, வானொலிப் பேச்சு, மேடைச் சொற்பொழிவு முதலியவற்றால் இவர் புரிந்துவரும் தமிழ்ப் பணிகள் பல. சிங்கப்பூர், மலேயா முதலிய வெளிநாடுகளிலும் இவரது தமிழ்ப்பணி நிகழ்வுற்றது. இத்தகை இளம் பெருந்தகையார்

ஒருவரையே இன்று நம் செந்தமிழ்ச் சொக்கன் திருவருள், 'செந்தமிழ் இலக்கியச் செம்மல்' என்னும் பட்டத்திற்கு உரியவர் ஆக்குகின்றது. இச் சிறப்பு இங்குக் கூடியுள்ள உங்கள் அனைவர்க்கும் மகிழ்ச்சியைத்தரும் என்பதில் ஐய மில்லை. 'செந்தமிழ்ச் சொக்கன் திருவருளிருந்தால் எல்லாம் கிடைக்கும்' என்பதை எங்கள் ஆதி பரமாசாரியர்,

தண்டுவரும் குண்டுவரும் தானைவரும் ஆனைவரும்
வண்டில்வரும் மாடுவரும் மாடுவரும் — மிண்டிப்
பெருங்கோட்டை யுஞ்சுமையும் பின்புவருங் கூடல்
அருங்கோட்டை வாசலிற்சென் ருல்.

என்று அருளிச்செய்கின்ருர்.

எனவே, செந்தமிழ் இலக்கியச்செம்மல் திரு ந. சஞ்சீவி அவர்கள் இன்னும் மேன்மேலும் பல பட்டங்களும் பரிசு களும், உயர்வும், ஆன்ம ஞானமும் பெற்றுத் தமிழ்ப்பணியும், சைவப்பணியும் செய்து பன்னலத்துடன் நீடுவாழ எங்கள் செந்தமிழ்ச்சொக்கன் திருவருள் துணைபுரிக என இந்நன்னு ளில் அவருக்கு நல்வாழ்த்து வழங்குகின்ரேம் மற்றும் இன்று வருகை தந்து சிறப்புரையாற்றிச் சிறப்பிக்க இருக்கும் நம் தமிழ்நாடு இந்து அறநிலைய ஆணையர் அவர்களும், ஏனைய அன்பர்களும் நலம் பல பெற்று நீடுவாழ ஆலவாய்ப்பெரு மான் அடிமலர்களைச் சிந்திக்கின்ரேம்.

தேவே மதுரை நகர்ச் சிற்பரனே எவ்வுயிர்க்குங்
கோவே எனையாளுங் கோவேஎன் — நாவே
உனைத்துதிக்கச் சிந்தை உனை நினைக்கச் சென்று
கனத்தில் உனைவணங்கக் காண்.

வாழ்க சைவம்! வளர்க திருநெறி!



# எண்ணிய எண்ணங்கள் !
# சொல்லாத சொற்கள் !*

" செந்தமிழ் இலக்கியச் செம்மல் "

**டாக்டர் திரு. ந. சஞ்சீவி**

" ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு."

— பழம் பாடல்.

தெய்வத் திருவுருவாய் - தருமத்தின் பெருவுருவாய்த் - திகழும் திருக்கயிலைக் குருமாமணியாம் தருமைக் குருமகா சந்நிதானத்தின் திருவடிகளுக்கு வணக்கங்கள் :

உலகமே ஒரு திருவிளையாடல் ; உலக வாழ்க்கையே ஒரு திருவிளையாடல். திருத்தருமை ஆதீனம் எங்கள் குடும்பக் குலதெய்வம். அத் தெய்வம் இடும் அருட்பிச்சையே இன்று இந்த ஏழைக்கும் கிடைத்திருக்கும் ஏற்றம். இவ்வுண்மைகளை உளமார உணரும் ஒரு சிறுவன் என்ற வகையில் எல்லாம் வல்ல இறைவன் - செந்தமிழ்ச்சொக்கன் - நரி பரியாக்கிய நாயகன் - பிட்டுக்கு மண் சுமந்தும் பிரம்படிபட்ட பெருமான் - திருநாளை - திருவிளையாடலை - நினைவூட்டும் இப்பெருநாளில் எல்லோர்க்கும் என் மனமார்ந்த வாழ்த்துக்கள் : பணிவார்ந்த வணக்கங்கள்.

---

* திருத்தருமை ஆதீனத்தின் திருவருளால் அடியேன் "செந்தமிழ் இலக்கியச் செம்மல்" என்ற பட்டம்பெற்ற ஞான்று நன்றியுரை நவில அரைமணி நேரமே அமைந்தது. எண்ணிய எண்ணங்கள் பல எனவே சொல்லாத சொற்களும் பல! அவை பெற்ற எழுத்துருவமே இது. இதில், உள்ளபடியே 10—9—1970ஆம் நாள் மாலை நடைபெற்ற விழாவில் பேசிய உயிர்ப்பகுதி பேசமுடியாதுபோன உடற்பகுதியுடன் இருக்கிறது. அவ்வளவே! — ந. ச

என்னை ஓரளவேனும் ஊடுருவிப் பார்த்தவர்கட்கு என் பிறவிப் பண்புகள் சில தெரியும். அவற்றுள் ஒன்று ''வாழ்தல் வேண்டிப் பொய் கூறேன்; மெய் கூறுவல்" என்னும் புறநானூற்றுப் (139) பண்பு. அந்தக் காரணத்தாலேயே அண்மையில் காஞ்சியில் காமகோடி பீடாதிபதிகள் நடத்திய "வித்வத் சதசி"ல் அடியேன் சற்றும் எதிர்பாராவகையில் அவர்கள் விடுத்த அன்பழைப்பின்பேரில் கலந்துகொண்டபோது ஒன்று உரைத்தேன்:

"கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறல்"

— பெரியபுராணம் 143.

எளியேன் வேணவா என்று.

எவரையும் கைம்மாறு கருதி முகமன் செய்வது ஏழையேன் நோக்கம் அன்று என்றும் - இறைவனையும் மதிக்கத் துதிக்க மறவேன் ஆயினும் கைம்மாறு கருதிப் புகழ விரும்பேன் என்றும் - விளக்கினேன். அடியேன் செய்யும் தவறுகட்கு எல்லாம் ஆண்டவன் தண்டனை தந்தே எளியேனைக் கடையேற்ற விரும்புகிறேன் என்றும் தப்புக்குரிய தண்டனைகளில் இருந்து தப்புவது என்னைப் புடமிட்ட பொன்னுக்காது என்று எண்ணுகிறேன் என்றும் இயம்பினேன். அதே உண்மை உணர்ச்சியோடேயே இந்தத் தெய்வ மாமன்றத்தில் நின்று முதற்கண் குருமகா சந்நிதானத்திற்கு என் உளமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இன்று எளியேனுக்குக் கட்டப்பட்டிருக்கும் பட்டம் அரியது; பெரியது அதை அடியேன் கனவிலும் எதிர்பார்த்தது இல்லை. ஆவணி மூலத் திருநாளில் தருமை ஆதீனத்தில் பட்டங்கள் வழங்கப்படும் பான்மையை முதன்முதல் நம் சித்தாந்தப் பேராசிரியர் திரு. அருணைவடிவேலர் அவர்கள் வாயிலாகவே காஞ்சியில் இருக்கும்போது கேள்விப்பட்டேன். சென்ற ஆண்டு வரை கூட இவ்விழா அழைப்பைச் சிறியேன் பெற்றதில்லை. இடையிடையே தருமை ஆதீனம் பேராசிரியர் சேதுப்பிள்ளை முதலாகப் பெரியோர் பலர்க்கும் பட்டங்கள் வழங்கும் செய்தியைச் செவிமடுத்தபோதும் அது தரப்படும்

நாளின் அருமை பெருமை முதலியன அறியா அறிவிலியாகவே இருந்துவந்திருக்கிறேன். இந்த ஆண்டே - இன்றைய விழா அழைப்பைப் பெற்றபோதே - இடையீடின்றி இருப தாண்டுகளில் பட்டம் பெற்ரேர் முழுப் பட்டியலேயும் பார்க்கும் பேறு பெற்றேன்; பட்டம் வழங்கப்பெறும் பெருநாளின் தெய்வச் சிறப்பையும் திருவிளேயாட்டற் பெருமையையும் ஓரளவு தெளிந்தேன்.

இந்நிலேயில் நானூறு ஆண்டுகட்கு மேலான நல்வாழ்வு பெற்ற தருமை ஆதீனத்தில் - அந்த நானூறு ஆண்டுக் காலத்தில் கால்நூறு ஆண்டுக்காலம் (1945-1970) ஒப்புயர்வு அற்ற அருளாட்சி நடத்தியுள்ள இருபத்தைந்தாவது குருமகா சந்நிதானம் தமது இருபத்தைந்தாவது ஆட்சி ஆண்டு நிறைவு விழாவை - பொன்விழாக் காலத்தின் தொடக்க ஆண்டை - ஆரவாரம் இன்றி அம்பலவாணன் திருமுன்பு கொண்டாடிக் குளிர்ந்திருக்கும் நிலேயில் தருமைக் கல்வி ஆதீனங்களின் வெள்ளிவிழா ஆண்டும் பிறக்கும் வேளேயில் - குருவாரத்தில் - குரு மூலத்தில் - மகாசந்நிதானம் மௌன மலேயாய் மிளிரும் நிலேயில் — திருச்சிராப்பள்ளி மௌன மடத்தால் வாழ்வு பெற்ற ஒரு குடும்பத்தின் மூன்ரும் தலே முறைக் குழந்தைக்கு அது தமிழ் ஆசிரியத் தொழில் ஏற்று இருபதாண்டுகள் நிறைகிற ஆண்டில் - சற்றும் எதிர்பாரா வகையில் - கனவிலும் கருதா நிலேயில் - இருபதாம் ஆளாய்த் தேர்ந்தெடுக்கப்பெற்றுச் "செத்தமிழ் இலக்கியச் செம்மல்" என்ற சிறந்த பட்டம் வழங்கப் பெறுகிறது என்ருல் தெய்வத் திருவிளேயாடலே என்னென்று எண்ணுவது? - ஏத்துவது?

இந்த நேரத்தில் குருமகாசந்நிதானத்தின் திருச்செவி கட்கும் இந்தத் திருநெறிய தெய்வத் தமிழ் மன்றத்திற்கும் எளியேன் தெரிவித்துக்கொள்ள வேண்டிய இன்றியமையாத் தலேயாய செய்திகள் சில உள. முதலாவது பல்கலேக்கழகப் பட்டங்களேயே நேரில் சென்று பெறும் நோக்கம் — ஏக்கம் — இல்லாதவன் எளியேன் என்பது. காரணம் அந்த விழாக்கள் நடத்தப்பெறும் முறையில் எளியேனுக்கு ஈடுபாடு இல்லாமை யும் - அந்த விழாக்களில் கடந்த சில ஆண்டுகளில் காணப் படும் போக்குகளே எளியேன் விரும்பாமையும் - மட்டுமன்று; அந்தப் பட்டங்கள் எல்லாம் அவ்வப்போது என் அறியாமை யைப் பார்த்து ஓசைபடாமல் சிரிக்கும் சிரிப்பை எளியேனல்

பொறுத்துக்கொள்ள முடியாமையே ஆகும். 'நான் தனக்கு அன்பின்மை நானும் தானும் அறிவோம்' என்ற திருவாசகம் எப்போதும் என் நினைவுக்கு வரும் ஒரு வாசகம், அறிவுக் கட்டடங்கள் தரும் பட்டங்களே இத்தகைய எண்ணங்களை எழுப்பி என்னைப் புண்ணுக்குமானால் இந்த அருட்கோயில் தரும் இந்தப் பெரும்பட்டம் என்னை என்ன பாடுபடுத்தும் என்று எல்லோரும் எண்ணிப் பார்க்க இறைஞ்சுகிறேன்.

எளியேன் பிறவிப் பண்புகளுள் இன்னும் ஒன்று - எள்ளளவு செருக்கும் - எப்போதும் - எதற்கும் - கொள்ளாமையே! செருக்கில்லாச் செம்மையே ஏழையேன் விரும்பும் செல்வங்களுள் எல்லாம் சிறந்த செல்வம். எனவே இன்றும்-என்றும் - எளியேனுக்குத் தரப்பட்டிருக்கும் இப்பெரிய பட்டம் சுமை நிறைந்ததாக இருக்குமே அன்றிச் சுவை நிறைந்ததாக இருக்கவே இருக்காது. இப்பட்டம் எளியேன் பயன் படுத்த அன்று - எளியேனைப் பயப்படுத்தவே ஆகும். ஆண்டவன் தடுத்தாளும் அருளாளன் அன்றோ ? அடியேன் வாழ்க்கைப் படகு காலக் கருங்கடலில் சிறுமைப் பெரும் பாறைகளில் மோதி சிதைந்து சிதறி மூழ்காமல் செம்மை வாழ்வுபெற ஒளிகாட்டி வழிகாட்டும் கலங்கரை விளக்கமாகவே கருணைக் கடலாய் - கடுந்தவ மலையாய் - விளங்கும் தருமை ஆதீனம் தரும் இந்தப் பட்டம் ஒளிகாட்டும்; வழிகாட்டும்.

எளியேனுக்குக் குருமகாசந்நிதானம் பட்டம் வழங்கத் திருவுள்ளம் கொண்டிருப்பதாய்க் குற்றமில்லா நற்றமிழ்ப் பேராசிரியர் குருசாமி தேசிகர் எழுதியபோது முதலில் எளியேன் உள்ளத்தில் முகிழ்த்த உணர்வு கரைகாணு வியப்பு கலந்த நன்றியுணர்வே. காரணம், திருஞானசம்பந்தப் பெருமான் பிறந்த திருநகரில - திருமுலைப்பால் விழாவில் - அடியேன் சில மணித்துளிகளே பேசிய பேச்சு ஒன்றே குருமகாசந்நிதானம் எளியேனின் பேச்சாகக் கேட்ட ஒரே பேச்சு. அப்படியிருந்தும் அன்றே அப்பெருமான் எளியேன்பால் காட்டிய ஆர்வம் ஏழையின் உள்ளத்தை உருக்கியது. அதனினும் மேலாக குருமகாசந்நிதானம் தம் அடியார் வினைகள் நோகத் தம் அடிகள் நோக அடிமேல் அடிவைத்து நடந்து வந்த காட்சியும் அந்த நாள் இராஜராஜசோழன்போல அருகிருந்து திருமுலைப்பால் விழா நிகழ்த்துவித்த திறமும்

எளியேன் கல்நெஞ்சையும் கரைத்தது. அதனுலேயே அன்று மாலையே – குருமகாசந்நிதானம் அங்குத் தங்காமல் தருமைக்குத் திரும்பிவிட்ட நிலையிலேயே - தமிழக சட்ட மன்றப் பேரவைத் தலைவர் தலைமையில் நடந்த கருத்தரங்கில் என் வியப்பையும் மகிழ்வையும் வெளிப்படுத்தினேன். இந்த நிலையில் தேசிகர் திருமுகம் கண்டதும் எல்லையில்லா வியப்பும் மகிழ்வும் எய்திய நிலையில் 'இந்த உலக வாழ்வுக்கு இந்த அருட் கேடயம் இன்றியமையாதது' என்ற ஒரே எண்ணத்தாலேயே உடனேயே ஒப்புக்கொண்டேன். சின்னுள் சென்ற பின் 'இந்தச் சிறியவனுக்கு அந்தப் பெரிய இடம் என்ன பட்டம் தரும் - பார்ப்போம்' என்று பற்றற்ற பற்ருேடு எதிர்பார்த்திருந்தேன். அழைப்பிதழில் அறிவிப்பு கண்டதும் நாணினேன்; நடுங்கினேன். 'செந்தமிழ் இலக்கியச்செல்வர்' என்ற பட்டம் இருந்தாலும் அவ்வளவு நாணேன்; நடுங்கேன். ஆனுல் 'செம்மல்' - செந்தமிழ் இலக்கியச் செம்மல்; ஆயிரம் செல்வரும் நின்கீழ் ஆவரே! எனவே அழைப்பிதழ் கண்டதும் உள்ளபடியே சத்தியமாய்ச் சாற்றுவேன் - ஏழை உள்ளத்தில் எப்போதும் எரியும் எளிமை விளக்கில் இருந்து உதிர்ந்த பூ ஒன்று உரைத்த உரை; 'உன் - பண்பறிந்து - விருப்பறிந்து பட்டம் வருகிறது. நீ செல்வத்துக்கு மயங்காதவன் -செல்வரிடம் மண்டியிடாதவன் - செம்மையையே விரும்புபவன் ; உன் பரிசு அறிந்து உலக நாயகன் தரும் உயர்ந்த பரிசே பரிசு. எதை நீ விரும்புகிருயோ அது உனக்குக் கிடைக்கிறது.' இந்த உரை கேட்ட நிலையிலும் எளியேன் உள்ளம் உண்மையிலேயே நைந்து புலம்பியது ஒன்றுக்குத் தான். 'இந்த ஏழை இன்னும் செந்தமிழ் இலக்கியச் செம்மல்தானே! - இது முதற்படிதானே! - 'சிவநெறி செம்மல்' என்பதல்லவோ நாம் விரும்பும் முடியான படி! - இதுவே எளியேன் உண்மை உள்ளத்தின் உண்மைப் புலம்பல்! அகந்தைக் கிழங்கை அகழ்ந்து எடுக்கும் தொழும்பர் உளக் கோயிற்கு ஏற்றும் விளக்கையே தொழும் தொண்டன் அடியேன். எனவே எல்லா மடங்களுள்ளும் எளியேனுக்குத் தாயும் தந்தையுமாய் விளங்கும் ஒரே மடமாகிய தருமை ஆதீனத் திருமடத்தின் குருமகாசந்நிதானம் எளியேனையும் வான்கருணையுடன்வாவென்று அழைத்து வழங்கியிருக்கும் இப் பட்டம் எந்தப் பதட்டத்தையும் ஏழையேனுக்குத் தரவில்லை - தர முடியாது - என்பதைத் தாழ்மையுடன் தாள்வணங்கித் தெரிவித்துக்கொள்கிறேன். (தொடரும்)

# ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள்
# காசியாத்திரை அனுபவங்கள்

### திரு. அ. கல்யாணசுந்தர தேசிகர்

( மலர் 29, இதழ் 10, பக்கம் 519 இன் தொடர்ச்சி )

**துண்டிராஜ கணபதி :**

துராதசதன் என்னும் கொடிய அசுரன் காசியைக் கவர்ந்து ஒளித்துவிட்டான். தேவர்களும் முனிவர்களும் அம்பிகையிடம் சென்று முறையிட்டுக்கொண்டார்கள். அவள் கோபங்கொண்டாள். அப்பொழுது அவளுடைய திருமுகத்தினின்றும தோன்றிய இந்த விநாயகப் பெருமானுக்கு ஐந்து திருமுகங்களும், பத்துத்தோள்களும் அதற்கு ஏற்ப ஆயுதங்களும் பொருந்த வக்ரதுண்டமூர்த்தியாக வெளிப்பட்டுப் பெருமாட்டியின் உத்தரவின்படியே அவ்வசுரனை அடக்கித் தம் திருவடியின்கீழ் அமர்த்தியருளி காசியம்பதியை மீட்ட அக்காலத்தில் தேவர்களும் முனிவர்களும் மகிழ்ந்து வேண்டித் துதிக்க இப்போதுள்ள இந்தத் திருநாமமும், இத்திருவுருவமும் கொண்டருள்பாலித்தார் இவர் கிரியா சக்தியின் அம்சம்; இவரை வணங்கினல் இராஜச, தாமச குணங்கள் ஒழிந்து சத்துவ குணம் பெருகி முக்தி கிட்டும.

**சிவபரத்வம் :**

விஷ்ணு வேதங்களை வகுத்துத் தொகுத்துக் கொடுப்பதற்காக இந்நிலவுலகிலே வியாசன் என பராசர முனிவரின் குமாரனாக வந்து தோன்றினர். அதற்கு முன்பு வேதங்கள் த்ரயீ (ரிக், யஜுர், சாமம்) எனப் பெயர்பெற்று இருந்தன. இப்பால் வியாசன் வகுத்துக்கொடுத்தபிறகு அது நான்கு (ரிக் யஜுர், சாமம். அதர்வணம்) வேதங்களாயின வியாசன் தன்னை வந்து அடுத்தவர்களுக்கு ஞான உபதேசமும், மெய்ந்நூல் உணர்வும்,

விளக்கமும் அருளிச்செய்துவந்தான். ஞான விளக்கங் கூறுங்கால்: வேதங்கள் பல (அனந்தா வை வேதா) என்றும்,

அஹம் ஹி ஸர்வ ஹவிஷாம் போக்தா சைவ பலப்ரத:
ஸர்வதேவ தனுர் பூத்வா ஸர்வாத்மா பர்யவஸ்தித:

எல்லாவற்றிலும் மேலான சிவபெருமானே அருள் வழங்கும் பெருமானுகவும், யாகங்களை ஏற்பவனுகவும், தேவாதிதேவனுகவும் விளங்குகிருன் என்றும்,

பிர்ம விஷ்ணு ஸுரேந்த்ராத்யா: பசவ: பரிகீர்த்திதா:

பிர்மா, விஷ்ணு, இந்திரன் முதலியோர் பசுக்கள் என்றும் சிவபரத்வத்தை எடுத்து மொழிந்தார் ஆனுல், அவர் வகுத்த வேதங்களில், விஷ்ணு, இந்திரன், பிர்மா, சந்திரன், அக்கினி, வருணன், வாயு முதலிய எல்லாத் தேவர்களும் பிர்மவஸ்து என்று போற்றப்படடிருக்கின்றனர். இந்த விளக்கமும் அவர் வாய்மொழியாலேயும் மாணவர்களுக்கு அளிக்கப்பட்டது. இந்த நிலையில் அவருடைய மாணவர்களாக உள்ள மகரிஷிகள், “ தாம் இதுகாறும் உபதேசித்தருளிய எல்லாவற்றுலும் மெய்ந்நூல்களின் சாரமாக உள்ளது எது என்று எங்களுக்கு இன்னும் விளங்கவில்லை; ஒவ்வொன்றும் பிர்மம், பிர்மம் என்று பலப்பல சந்தர்ப்பங்களிலும் கூறியுள்ளீர்; ஆனுல் எல்லாவற்றிற்கும் மேலான பரமபதியாக உள்ளது எது என்று எல்லாம் அறிந்த தாம் அறுதியிட்டுக் கூறுதல் வேண்டும்” என்று பணிந்து வேண்டினர். அப்பொழுது வியாசனது மனதில் அகங்காரம் மேலிட்டு, “ நாமோ கேசவனின் மறுபிறப்பு; நாமே எல்லாம் தெரிந்தவர்; எல்லாவற்றிற்கும் மேலானவர்” என்ற உணர்வு தலைதூக்கிநின்றது. அந்த மயக்கநிலையில் “ நாராயணனே பரமபதி” என்று கூறினுன்.

மாணுக்கர்கள், “ தாம் இந்த இடத்திலிருந்து கூறியதை ஏற்பதற்கு எங்கள் மனம் இடந்தரவில்லை. காசியம்பதியில் விசுவேசன் முன்னிலையில் இதனை எடுத்து மொழிந்தீராஞல் எல்லோருக்கும் மனதில் உறுதி பிறக்கும். அவ்விதமே செய்தருளவேண்டும்” என்று வினயமாக வேண்டிக்கொண்டனர். ‘அவ்விதமே செய்வோம்’ என்று கூறி அவர்களையும் உடனழைத்துக்கொண்டு காசியம்பதியை அடைந்து நித்திய

கர்மானுட்டானங்களை முடித்துக்கொண்டு விதிப்படி தம் ஆத்மார்த்த பூஜையையும் முடித்துக்கொண்டு ஸ்ரீ விசுவேசன் சந்நிதியடைந்து தம் உள்ளுணர்வு வேறுவிதமாக உணர்த்தியபோதிலும் அப்போது அவன்பால் தற்போதம் மிகுந்து நின்ற நிலையில் இருகைகளையும் மேலே உயர்த்திக்கொண்டு, "கேசவனைக்காட்டிலும் மேலான தெய்வம் இல்லை. சத்யம், சத்யம், சத்யம்.

ஸத்யம் ஸத்யம் புனஸ் ஸத்யம் ந தைவம் கேசவாத் பரம்:"

என்று உரத்து சத்தமிட்டுக்கூறினன். அவன் உயரத்தூக்கிய கை அவ்விதமே நின்றுவிட்டது. வியாசன் சிவாபசாரம் செய்துவிட்டதை அறிந்து விசுவேசன் திருவடிதாங்கிநின்ற நந்தியெம்பெருமான் கடுங்கோபங்கொண்டு உயரத்தூக்கி நின்ற அவனுடைய கைகளைத் தம் வேத்திரப்படையால் துணித்துவிட்டார். மேலும், 'பொய்யுரை புகல்வோர் கதி இது என யாவரும் உணர்ந்துகொள்ளும்வண்ணம் வியாசனாகிய நீர் இதே நிலையில் இங்கேயே நின்றிருப்பீராக' என்றும் சாபம் இட்டார்.

தம்மை, வியாசன் பரமபதி என்றுரைத்த மொழி காதில் விழுந்ததும் நாராயணன் மிகுந்த சீற்றத்தோடு விரைந்து அங்கு ஓடிவந்து 'ஏ மூடனாகிய வியாசனே! கேட்பாயாக. நீ உன்னைக் கெடுத்துக்கொண்டதோடல்லாமல் என்னையும் அல்லவா கெடுத்துவிட்டாய். சத்யமாகச் சொல்லுகிறேன், இந்தச் சிவசந்நிதியில்; நான் உங்களுக்கு எல்லாம் பதியாக உள்ளவன்; எனக்குப் பதியாக உள்ள இறைவன் சிவபெருமானே. அகில உலக நாயகனும், பரமபதியாகவும் உள்ளவரும், என்னையும் உன்னையும் பிரமன் உள்ளிட்ட தேவர், முனிவர் முதலிய எல்லா உயிர் வர்க்கங்களையும் காத்தருளுபவனும் சிவபெருமானேயாவார். இது சத்யம். அவருக்கு மேற்பட்ட பதிப்பொருள் இல்லை. இது சத்யம்' என்று சொல்லி விலகிப்போனர்.

தத்வம் மே வசனம் வ்யாஸ ச்ருணு மூட யாதாபவத்
அஹமேவ ஜகத்கர்த்தா: மம கர்த்தா மஹேச்வர:
தஸ்ய தேவாதி தேவஸ்ய கர்த்தா கோபி ந வித்யதே:

"வானமேத்த வைகுந்த யான் வாழ்வு பெற்றதுவும்
ஞான நான்முகன் சத்தியஉலகம் நண்ணியதும்
ஏனை விண்ணவர் தத்தமஇருக்கை நண்ணியதும்
ஆனுயர்த்தவன் அருட்குறியருச்சனைப் பயனால்"

— காஞ்சிப் புராணம்.

வியாசன் தன்னை மறைத்திருந்த அகங்காரம் ஒழிய தன் பிழையுணர்ந்து மெய்யுருகி தான் செய்த பிழை பொறுத்துக் காத்தருளவேண்டும் என்றும் தான் செய்த செயல்போல பிறர் செய்யாதிருக்கவும் இனியும் தான் நிலைதிரியாது மனம் மயக்குறாது நன்னிலையில் நிலைத்துநிற்கவும் இச்சிவசந்நிதியிலேயே அப்பொழுது நின்ற நிலையிலே என்றும் இருக்கும் படியும் பணித்தருளவேண்டும் என்று விசுவேசனை வேண்டிக் கொண்டான். "அவ்விதமே ஆகுக" என விசுவேசன் அருள்செய்து, வியாசனைத் தமது சந்நிதியில் ஏற்றுயர்க் கொடி மரமாக ஏற்று அருள்பாலித்தார். எல்லாச் சிவசந்நிதிகளிலும் கொடிமரம் இதன் விளக்கமாக நிறுவியிருத்தலை இன்றும் காணலாம்.

வியாசன் சிவாபசாரம் செய்துவிட்டபடியால் காசியில் வசிக்க அருகதையற்றவனானான். கங்கையில் கீழ்க்கரைப் பகுதியில் வியாசகாசி என்னுமிடத்தில் ஒரு குகையில் தங்கியிருக்கிறான். மேற்குக்கரையில் உள்ள காசிக்கு அவன் வருதல் கூடாது என்று தடைவிதிக்கப்பட்டிருப்பதாகவும் வரலாறு சொல்லுகிறது. வியாசகாசியில் குறைபட்ட கைகளோடு அவன் நின்றிருக்கும் திருக்கோலத்தை இன்றும் காணலாம்.

வியாசனைத் தண்டிக்கவேண்டியவர் சிவபெருமானேயல்லாது நந்தியெம்பெருமான் இதனைச் செய்தது எதனால் என்ற ஒரு வினாவை எழுப்பிக்கொண்டு அதற்கு ஒரு விடையும் தருகிறது காசி ரகசியம்

1. வாதராயணர் எனும் வியாசன் அவத்தை வயத்தால் அறிவு மயங்கி புராணகர்த்தாவாகிய விசுவநாதர் திருமுன்னர் 'நாராயணனே பரமபதி' என்றான்.

2. அவன் நிலையிலும் வேதங்கள்கண்ட நிலையிலும் நாராயணனே பரமபதி என்பது. மேலும் வேதங்கள் சொல்லும் இந்திரன், சந்திரன், பிரமன் முதலிய எல்லாம் பரப்பிரமம் என்று அதன தன்கீழ்ப்பட்டதை நோக்கும் வழக்கால் என்று சமாதானம் கொள்வர் மேலோர்.

3. தாமும் ஓர் வாகனம். விஷ்ணுவும் ஓர் வாகனம். விஷ்ணுவே வியாசன். இயல்பாக இருவருக்கும் உள்ள அபிமானம் ஒரு காரணம்.

4. தமக்குப் பெருமானிடம் உள்ள அன்பும், அபிமானமும் கொடியாகிய வியாசனுக்குமுண்டு.

5. தாமும் விஷ்ணுவும் தருமவடிவானவர்கள். அத் தருமம் சிவபெருமான் திருவடியில் அவரைத் தாங்கும் வாகனமாக ரிஷப உருவில் விழுந்து கிடப்பது. தருமத்தை மற்றையோர் யாவரும் சிரசால் வந்திக்க வேண்டியவர்கள். அத்தருமம் சிவ பெருமான் திருவடியில் ஒதுங்கிக்கிடப்பது. அது பெருமானுடைய ஆணையின் சொரூபம். சிவபெருமான் இச்சை வழியே ஒருவர் வாழ்வும், வீழ்ச்சியும் இருக்கிறது. அவரது ஆணையாக உள்ள நந்தியெம் பெருமானுக்கும் அதே அதிகாரம் உண்டு. ஆகவே ஆணையாகிய நந்திதேவர் வியாசனைக் கண்டித்தார் என்க.

இவைகளேயன்றி இத்தலம் குறித்து வரலாறுகள் பல உள்ளன. விரிக்கிற் பெருகும்.

இது தாரகக்ஷேத்திரமாகையால் இங்கே யாவராயினும் யாதாயினும் அது உயிர்விடும் நேரத்தில் தம் இருமைந்தரும் உடன்வர தேவியானவள் அங்குத் தோன்றித் தம் முந்தானை யால் வீசிக் களைப்பாற்ற, பெருமான் ஓடிவந்து உயிர்த் தாரக மந்திரத்தை வலது செவியில் ஓதி உய்வளித்து தமது சொரூப முத்தியளித்தருளுவாள் என்று பல நூல்களும் சொல்லு கின்றன.

**தருமையாதீனம் 10-வது குருமகாசந்நிதானம் அருளிச்செய்தது:**

இள அடியாராக இங்குக் காசியில் வந்து தங்கி கல்வி அபிவிருத்தியும், ஞானத்தவமும் பெருக்கி இருந்து, பட்டத்தமர்ந்த பின்னும் ஸ்ரீகாசி வந்து வழிபட்டு வளம் பெருக்கிக்கொண்டு தாம் கண்ட அநுபவமாக இவ்வாதீனம் பத்தாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அருளும் சில மொழிகள் :-

**விசுவநாதரை நோக்கி :**

" பிறவிப்பெரும் பிணிக்கொரு மருந்து "

" பெரிய மூதுலகில் அடியார் மலக்கல்நார்
உரித்துயிரை வாழையின் கனிசெயும் கருணைப்
பிரவாகம் அன்றோ "

கூற்றின் இடர்மாற்றவே அவிமுத்தம் என்றோது காசி நகரம் வந்தடைந்தேன். கூட்டை உயிர்விடுகாலம் நாட்டு மணி கன்னிகைக்குலவு தீரம் சேரவும் ஏற்றின் புறத்து உன்னிடப்புறம் பிரியாத இமயாசலம் பயந்த என் அன்னை முன் உதவுபிள்ளை விளையாடவும் இளையவனை மடியில் வைத்தே ஊற்றெடுக்கும் கருணை முலையமுதம் ஒருகை கொண்டுட்டி எனை ஒரு பிள்ளையாய் ஒரு கரத்தால் தடவி அருள் நயனம் வைத்தெடுத்து உத்தரீயம்வீசு தென்றற்காற்றினால் என் களையை மாற்றிடவும் நான் கண்டு கண்கள் குளிர நின் கண் வைப்பாய்.

"இன்னம் எத்தனைநாள் இருக்குமோ காயம் என்று ஏங்குதே நெஞ்சம் ஐயோ! இவ்வுடலில் நான் படுவது எந்தை நீ அல்லாமல் இவ்வுலகில் யாவர் அறிவார்? என்னை உன் அடியார் குழாத்துடன் சேர்ப்பதற்கு இன்னும் எந்நாட் செல்லுமோ? இன்று வந்தருளுவாய், நாளை வந்தருளுவாய் என்று வழி பார்த்திருப்பேன் அன்னையே. என்னை வந்து அஞ்சலென்றாண்டு மெய் அடியாரோடு கூட்டுவாய் என்று அனுதினமும் அழுது அழுது மெலிவது அல்லாமல் இங்கு அடியேன் செய்வது என்றோ கன்னலே தேனே கனிந்த கனியே பெரிய கைவல்யமே "

"எங்கள் மலதிமிர படலம் கிழித்தோட்டுதற்கு
இரவி சதகோடி ... ..."

'இந்திரஜாலப்பகட்டாகும் ப்ரபஞ்சமோடு இரண்டுவித மாயை யெனும் பங்கம் முற்றும் கழுவவரு ஞான ஆனந்த பரிசுத்த சலதியெனவும், பரமகல்யாணகுண பரம சிவசத்தி யொடு பாகீரதிப்பெயர் புனை கங்கை நதியைப் புவியில் அன்னையென வைத்தநின் கருணைதனை என்சொல்லுவேன்."

'மரணகாலந்தனின் மணிகன்னிகைத்துறையில் வந்து சேரச்செய்து நீ மால்வெள்ளைவிடையின்மேல் வேலனுமையவ ளோடு வந்து என் வலது செவியிலே பரம உபதேசம் வைத்து ஆவி பரமானந்த பரம சலதியிலே மூழ்கிப் பாழான காயம் மெய்ப் பாகீரதிப்புனல் படிந்திட வரம் தந்தருள் கரணம் கடந்த முழு முதலே சிதாகாச கனகசபை நடராஜனே."

"மெய்யென்று பெயர் பெற்ற பொய்யான என் சடலம் விடும்காலம் நானறியவும் விமலமணி கன்னிகைத்துறை வந்து சேரவும் மெய்க்கங்கை நதி மூழ்கவும் துய்ய வெண்ணீறங்கம் எங்குமே பூசவும் சுத்த கண்டிகை பூணவும் தொண்டு செய்யும் அடியார்கள் தோத்திரம் சொல்லியே சூழ்ந்துகொண்டே நிற்க வும், அறிவு பரமானந்த சின்மயாகாச நின் அடியிணைகள் சிந்திக்கவும், கைகள் தொழ வாய் அஞ்செழுத்துச்சரிக்கக் கடாட்சம் வைத்தருள் ஐயனே."

"என்ன மாதவம் முன்பியற்றினேன் எளியனேன் இமை யவர்கள் பணிய அரிதாம் ஏர்கொண்ட அவிமுத்த நகரத்திலே யென்றும் இடையருதே வாழவும் மன்னி கங்காநதியில் மூழ்க வும் ஒரு பெரிய மணிகன்னிகைத்தடத்தில் வந்து படியவும் வேதம் ஓதும் சிற்சிவஞானவாவியுதகம் பருகவும்"

"நாட்கமலம் அனைய நின் திருவடித்தாமரையில் நவிலும் விண்ணப்பம் முத்திநகராகும் அவிமுத்தம் அகலாதிருந்துன்னை நான் பாடவேணும்....................."

"கமலையும் கயிலையங்கிரியும் உறை சிவலோகனே."

குமரகுருபரர் :

நீரெழுத்துக்கு ஒத்த உடன் நீத்தார்க்கு நீ நவில்வது ஓரெழுத்தே (முத்திபஞ்சாட்சரம்) முழுதும் அவர் எவ் வண்ணம் உணர்வதுவே? என்பு அணிவது, உடுப்பது தோல். எம்பிரான் தமர்கள், அவர் முன்பணியும் பேறுடையார் திசை முகனும் முகுந்தனுமே. செடிகொள் (வினைகள்) முடைப் (புலால் நாற்றம்) புழுக்கூடே சிற்றடியோம் இடுதிறை; (ஆனால்) மற்று அடிகள் (பெருமான்) அடியார்க்களிப்பது ஆனந்தப்பெருவாழ்வே. (இவ்விதம் இருக்க) பற்பகல்நோற்ற அருந்தவரும், பெறற்கரிய பரந்தாமம், எற்புடல் (எலும்பா லாகிய உடல்) விற்றனியேமும் கொளப்பெறுவது இறும்பூதே. நிணம் புணர்வெண் தலைக்கலன் கோனிரிழை முத்தித்திருவை மணம் புணர்வார்க்கு ஐயன் அருள் மணவாளக்கோலமே, முடைத்தலையில் பலிகொள்வான் மூவுலகும் அவர் தங்கடைத் தலையில் திரிவது கொல் (ஏன்) யாம்பெறு நின்காணியே (ஆன்மாக்கள் சாருபம் பெற்றநிலை).

அவிமுத்தத்து (இருப்பார்) எங்கே கண்மூடுவர் (அவர்) என்றும் வெள்ளிப்பொருப்பாளர் ஓடித்திரிவதெல்லாம் இப் புவனங்களை உருப்பாதியிற் படைத்தோர் (அம்பிகைக்கு ஒரு பாகத்தைக் கொடுத்தவர்) பாதியில் துடைத்து ஊழிதோறும் விருப்பார் உயிர்களின்மேல் வைத்துத் தாம் செயும் வேலை கண்டே (அவிமுத்தத்து அகிலேசர் ஆருயிர்களின்மேல் விருப்புவைத்து அழிப்பதும் அனுக்கிரகம் ஆதலின் தன் பாதியை அழித்து பெண்ணுக்குக்கொண்ட அவ்விறைவர் எல்லாப் புவனங்களிலும் ஓடி ஓடி அருள் வழங்கும் தன்மைய ராகலின் அவர் கண் மூடுவதெங்கே? மூடுவதற்கு நேரமேது. (மிகு உழைப்பினால் அவருடம்பும் இளைத்து ஒரு பாதியாகியது) கண் ஒன்று திருநுதலிற் கனல் உருவமாகப் படைத்த காசி நாதன் ஒன்று(ம்) நறையிதழித்தரென்றால் நெட்டுயிர்த்தாள் தரைமேல் வீழ்ந்தாள், எண் ஒன்றும் உணராமே கிடக்கின் றாள், இதுகண்டால் எழுத்தொன்று ஓதத்துண்ணென்று வருவர் எனத் துணிந்தனளோ தோகைதானே, அறியேன்."

"காணும் காணும் நதிகள் எல்லாம் புனற்கங்கையே. அங்குளதெய்வம் யாவையும் தாணு எங்கள் அகிலேசரே. மற்றைத் தலங்கள் யாவும் தடமதில் காசியே. பூணும் ஆசை

மற்று ஒன்றே. உடல் விடும்போது நன் மணிகர்ணிகைப் பூந்துறை பேணுமாறு பெறவேண்டும். அப்புறம் பேயோடு ஆடினும் இடப்பெறுதுமே. (சாரூபநிலையில் பெருமானுடன் கூடிநின்று சுடலையில் ஆடுதல்).''

பெற்றம் (இடபமும்) ஊர்வதும் வெண்தலை ஓட்டினில் பிச்சையேற்றுத் திரிவதும், பேய்களே சுற்றமாகச் சுடலையில் வாழ்வதும், தோலுடுப்பதும், தொண்டர்க்கு அரிது என்றால் கற்றைவார் சடைக் காசிப்பதியுளீர், கற்பம்தோறும் கடைநாள் உலகெலாம் செற்று மீளப்படைக்கவும் வேண்டுமே? (மகாஸ்மாசனத்தின் விளக்கம்) தேவரீர் பதம் சிந்திப்பது இல்லையே (ஏன்? சிவசொரூப முத்தியை அடைந்த உயிர்கள் சிவனே ஒத்து வெண்தலைமாலை எலும்புமாலை மூன்று கண்கள் மழுமான் ஏறூர்தல் முதலிய எல்லாம் பெற்று மயானத்து நின்று ஆடுதல் பலி ஏற்றல் எல்லாமும் செய்தாலும் உலகங்களைப் படைத்துக் காத்து அழித்தல்எனும் முச்செயலும்செய்ய வல்லவர்களில்லை. ஆகையால் அப்பதம் நாம் விரும்போம் நினைப்பென்றால் மறப்புமுண்டு; ஆகவே உம்மை நினையோம். என்பது மறுதலை.) முத்தியை விரும்புவோர்க்கு எல்லாம் தன் உடற்பாரம் தொலையவேண்டும். முடைநாற்றமெடுக்கும் இவ்வுடலும், எலும்பும் கழலவேண்டும் என்று விரும்புவது இயற்கை. ஆனால், காசிப்பதிவாழ் சிவபெருமானை விரும்பிப் பத்தி செய்வோர் அக்காசியம்பதியடையும்வரை மிகுந்த கவலை கொண்டு அவ்வுடலை மிகச் சிறப்பாகப் பேணிக் காத்து அங்கு வந்து உடல் விட்டதும் அவர்கள் (உன் சொரூபமுத்தி பெறுவார்களாதலின்) விரும்பிப் பெறுவது முடைத்தலை, என்பு, சாம்பல் இவற்றைத்தானே என்றும் கூறுவார்.

ஆனால், காசி முக்தி காமிகள் ஆக உள்ளவர்கள் மட்டும் விரும்பிச் செல்லத்தகுவது. காசிக்குச் சென்றால் உலகியல் இன்பங்கள் ஏதும் இங்குக் கிட்டுவதற்கில்லை. முத்தி ஒன்றே சித்திக்கும் என்று எண்ணுவோருக்கு :-

'' விசுவேச்வராய நரகார்ணவதாரணாய  
கர்ணாம்ருதாய சசிசேகர தாரணாய  
கர்ப்பூர காந்தி தவளாய ஜடாதராய  
தாரித்ர்யதுக்க தஹனாய நமச்சிவாய ''

காசியைத் தரிசித்தோருக்கு தரித்திரம், துக்கம் இரண்டையும் போக்கி நிலையான செல்வத்தையும், இன்பத்தையும் காசி விசுவேசன் அருளிச்செய்வான்.

“செம்பதுமபீடமும், பாற்கடலும், அமுதமும், (காம) தேனுவும், செம்பொன்நாடும், தேரும், ஏழ்புரவியும், உயர் வெள்ளையானையும், தேவரென்னும் சேனையும், நம்பு சிந்தா மணியும், ஐந்து தருவும், இரு நிதியமும், நல்லமதி வெண் கவிகையும், நாதாதி பூதவரை புவனமும், (அஷ்டமா) சித்தி யும் நாட்டும் இவையாதிபொருளும் உம்பர்புகழ் காசியினில் உன் கடைக்கண்கள் இடும் ஓர் அருட்பிச்சை. ஆனந்தமான உன் அடியார் உவந்திடும் பிச்சையன்றோ” என்பது ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக பரமாசாரிய சுவாமிகளின் அருள் வாக்கு. ஆகவே, எல்லாச் செல்வங்களையும், எல்லா நலன்களையும், இப்பூவுலகிலே வாழ்கின்ற காலத்தும் குறைவற உதவிப் பின்னும் முத்திச் செல்வமாகிய பெருஞ்செல்வத்தையும் எத்தா லும் திகட்டாத சிவானந்த சொரூபத்தையும் அளிக்கவல்லது இத்தலம்.

மகரசங்கிராந்தி, சூரிய கிரகணம், சந்திர கிரகணம், நவராத்திரி நாட்கள், தீபாவளி, சிவராத்திரி முதலிய நாட் களில் பல லட்சக்கணக்கான மக்கள் ஸ்ரீ காசிக்கு கங்கையில் நீராடி விசுவேசரையும் அன்னபூரணியையும் வணங்கி அருள் பெற்று மீள்வர்.

இங்கு மணிகர்ணிகைத்துறையில் இரவு பகல் எந்நேரமும் பிணம் எரிக்கப்பட்டுக்கொண்டேயிருக்கும். அங்கு இறந்த வர்கள் சடலங்களை எரிக்கவேண்டுமென்பதற்காக தொலை தூரங்களிலிருந்து சாலைவழியேயும், ஆற்றில் படகுவழியேயும் எடுத்துவருவர். அவ்விதம் எடுத்துவருவோர் நமது நாட்டி லுள்ளதுபோல மனவருத்தந்தோய வருவதில்லை. மகிழ்ச்சி யாக வரும் வழியில் சிற்றுண்டி முதலியன கொண்டும் வாய் “ராம் நாம் சத்தியஹை; ராம் நாம் சத்தியஹை” என்று உரைத்துக்கொண்டும் வருவர். அதன் பொருள் “உலகில் உள்ள எல்லாம் அழிவுபெறும். ஆனால் நிலைத்ததாக உள்ளது உயிர்த்தாரகமாகிய ராம மந்திரம் ஒன்றுமே” என்பது ஆகும்.

(தொடரும்)

# "கொழிதமிழ்க் கூடலில் கொன்றை வேணியான்"

வித்துவான். திருமதி. ப. நீலா

(மலர் 29, இதழ் 10, பக்கம் 533 இன் தொடர்ச்சி)

## 34. விடையிலச்சினை இட்டது

சந்தன மரங்கள் சூழ்ந்த மலையில் தவம் புரிந்த இயக்கியர்களுக்கு இறைவன் அட்டமாசித்தி உபதேசித்த அருமை கண்டோம்.

இப்பொழுது தனது திருவடியை வணங்க விரும்பிய சோழனுக்காக மதுரையின் வடக்குவாயிலைத் திறந்து பின் விடையிலச்சினையை அவண்பொறித்த இந்து சேகரனின் விந்தைச் செயலை விளம்புவோம்.

**காடுவெட்டிய காவலன் :-**

தோட்டுடன்பொருது ஒளிசிந்தும் துணைவிழிக்குயிலாம் அன்னையின் முலைக்கோடுபொருத திருமேனியோடு ஏகம்பர் எழுந்தருளியிருக்கும் காஞ்சீபுரத்தில் சோழமன்னனொருவன் காடுவெட்டி நாட்டைக் கழனியாக்கினான். அக்காரணத்தில் அவனைக் காடுவெட்டியசோழன் என்றனர் மக்கள். அவனோ உத்தமச் சிவபக்தரில் உத்தமன். அணிகலன்களைப் பொய்யென்று கருதி மெய்யான வெண்ணீறணிந்த கோலமொடு கண்டிகை ஆரமணிவதில் ஆர்வங்காட்டினான். கண்ணுதற் கடவுளே உண்மையான பரம்பொருளென்றுணர்ந்தவன். முக்கண் நாயகன், முப்புரத்தை முனிந்த நாயகன், மங்கையோர் பக்க நாயகன், மிக்கவானவர் பரவு நாயகன், அரவணிச் சொக்கநாயகனின் ஆடல்களைச் செவியால் நுகர்ந்து இன்பமடைந்துவந்தான்.

### விமலனைக்காண விழைவு :-

மதுரையில் கோயில்கொண்ட பெருமானை எப்போது காண்போமோ என்று அடங்கா ஆர்வத்துடன் ஒருநாள் கங்குலில் துயின்றுகொண்டிருந்தான். அவன் கனவில் புண்ணியமூர்த்தி ஓர் சித்தராய் வேடங்கொண்டு தோன்றி, 'இன்று இரவே தனித்துப் புறப்பட்டு மதுரைசெல் – உனது எண்ணப்படியே இனிய தரிசனம் கிட்டும்' என்று தெரிவித்தார்.

செம்பியர்கோனும் விழித்துணர்ந்து பெருமானின் பேரருளை நினைந்து வந்தித்து அவனுணைப்படியே தனித்துப் புறப்படுகிறான். நாட்டம் மூன்றுடை நாயகனின் நாமத்தை வாளாகக்கொண்டு அன்பெனுங் குதிரையேறி – நல்லருள் வழிகாட்ட மதுரை நோக்கி வருகிறான்.

### வைகையும் பகையோ ?

காடும் கல்லதருங் கடந்து மதுரையை அண்மியபோது வையைநதி கரைபுரண்டோடக் கண்டான். கரையிலுள்ள நெடியமரங்களை எல்லாம் வேரொடும் பறித்துவரும் விந்தை தனைக்கண்டு, கடக்க வழிதெரியாமல் கவன்றான். நல்ல நெய்யொழுகும் அறுசுவை யுண்டியைப் பசித்தவன் முன்பு படைத்து – அவன் ஆவலோடு உண்ணத் தொடங்கும்போது அவனது கண்கள் கண்ணீரைப் பெருக்குமாறு பறிப்பதுபோல இறைவன் அருளால் வைகையளவும் வந்தும் தரிசனம் கிட்டாதுபோலும் என்று ஏங்கினான். வழுதிமட்டுமல்ல; இவ் வைகையுமன்றோ எனக்குப் பகையாயிற்று – என்று வளவன் எண்ணிக்கொண்டிருக்கும்போது அவன் கனவில் தோன்றிய அந்தச் சித்தர் இங்கும் வந்து தோன்றி வரம்பற்றுப் பெருகும் வைகையைப் பார்வையால் வற்றச்செய்தார்.

### புண்ணியப் பயன் பெற்றேன் :-

வற்றிய ஆற்றைக் கடந்து சோழனுடன் வடக்குவாயிற் கதவினைத் திறந்துகொண்டு உட்புகுந்தார். காவல் நிறைந்த வீதிகளை மாடங்களைக் கடந்து பொற்றாமரைக்கரையடைந்து–

மன்னனை மூழ்கும்படிச்சொல்லி – இந்திர விமானத்துள் எழுந்தருளியிருக்கும் தம்மையும் தரிசனம் செய்துவைத்தார். வெம்மைசெய் கதிர்கால் செம்பொன் விமானத்தில் தம்மையும் தன்துணையாகிய மீனாட்சியையும் தரிசித்த சோழனின் அக முக மலர்வு கண்டு ஆனந்தித்தார். சோழனும் இம்மாபெரும் செயல் செய்த மனமகிழ்வில்,

எண்ணிய எண்ணியாங்கே யான்பெற முடித்தாய் போற்றி
பண்ணியன் மறைகள்தேருப் பான்மொழி மணாளபோற்றி
புண்ணியர் தமக்கு வேதப் பொருளுரை பொருளேபோற்றி
விண்ணிழி விமானமேய சுந்தர விடங்க போற்றி.

என்று உருகிக் கதறி வழிபட்டான்.

எத்துணையோ உடல்களை எத்துணையோ பிறவிகளில் எடுத்திருப்பேன். ஆனாலும் இம்மனித யாக்கையே எனக்குப் புண்ணியம் தேடித்தந்ததால் இதுவே எனக்குச் சொந்தமான உடல் என்று உணர்ந்தான்.

அந்நேரம் சித்தர் 'மன்னவ – நீ மதுரையுள் புகுந்த செய்தியை புலர்ந்தவுடன் பாண்டியன் புரிந்துகொண்டுவிடுவான் - அதற்குமுன் இவ்விடம் விட்டகல்க – என்று எடுத்துக் கூற அதற்கிசைந்த அரசனும் கோயிலைவிட்டகன்று வைகையின் வடகரைக்கு வந்தான். சித்தர் அங்கே அவனுடைய நெற்றியில் திருநீறுபூசி 'உனக்கு நலம் பல உண்டாகும்' என்று வாழ்த்தி மறைந்தார். திறந்த கோட்டைக் கதவினை மீண்டும் சார்த்தி விடை முத்திரையைப் பொறித்துவிட்டுத் தம் கோயிலுக்கு எழுந்தருளினார்.

### கயல் எப்படிக் காளையாயிற்று ?

விடிந்தவுடன் காவலர்கள் மற்றைத்திசைக் கதவுகளில் தாம் நேற்றுப் பொறித்திருந்த கயல் முத்திரை பிறழாமல் இருக்கவும், வடக்கு வாயிலில் நந்தி முத்திரை இருப்பதைப் பார்த்துக் கலங்கி மன்னனிடம் செய்தியைத் தெரிவித்தனர். மன்னன் குலபூடணனும் வந்துபார்த்து மனங்கலங்கி இன்னதோர் மாயை செய்தவர் யாரோ என்று வாடினான். உணவுங்

கொள்ளாமல் அன்றிரவு உறக்கமும் கொள்ளாமல் தரைமேல் படுத்துக்கிடந்தான் தார்வேந்தன்.

வேம்பலர்தாரானின் வேதனையை அகற்றவேண்டி மதுரைப்பெருமான் அவன் கனவில் 'மட்டலம்பிய தாதகிமாலை யனும் சோழனின் பக்தியையும், அவன் பொருட்டுத் தாமே கோட்டை வாயிலைத் திறந்து அவனுக்குத் தரிசனம் தந்தமை யையும், பின் அங்கே தமது இடபக்குறியைத் தாமே பொறித்த தையும் – விளக்கமாகக் கூறினர்.

நந்தமால்விடை பொறித்த வித்தகனின் செயலைப் பல ருக்குங்கூறி வியந்த குலபூடணன் பன்னாட்களுக்குப்பிறகு தன் கோடாத செங்கோலையும், கோமுடியையும் ஏடாரலங்கல் இராசேந்திரனுக்குக் கொடுத்து வானுடாளும் உரிமை பெற்றான்.

(வளரும்)

---

## அழகு மயில் வேலன்

### திரு. எஸ். வி. மாதவன்

எடுப்பு

அழகுமயில் மீதேறி பவனிவரும் பாலன்
பாதமலர் பற்றியே பாடுவோம் நாளும் (அழகு)

தொடுப்பு

சுடர்மிகுத்த வேலவன் சுந்தர முகத்தவன்
இடர்மிகுத்த வேளையில் இன்னலைக் களைபவன் (அழகு)

முடிப்பு

சடைமுடிச் சங்கர நாதனின் மைந்தனும்
படையறு வீட்டினைப் பாங்குறப் பெற்றவன்
மண்மீது வாடிடும் மாந்தரின் நலமதைக்
கண்போலக் காப்பவன் கருணைமிகு கந்தனே. (அழகு)



# திருமந்திரம் - குறிப்புரை

திருக்குறள்வேள்,

திரு. ஜி. வரதராஜப் பிள்ளை B, A.,

(மலர் 29. இதழ் 10, பக்கம் 537 இன் தொடர்ச்சி)

117 சூரிய காந்தமுஞ் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தஞ் சூழ்பஞ்சைச் சுட்டிடா
சூரியன் சந்நிதியிற்சுடு மாறுபோல்
ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே.

குறிப்புரை :- சூரியகாந்தம் - அறிவு. பஞ்சு - மலம். சூரியன் - ஆரியன் (குரு). சூரியகாந்தக்கல் சூரியன் முன்னே பஞ்சைச் சுட்டு எரிப்பதுபோல, சீவனது அறிவு குருவின் முன்னே அழுக்கு நீங்கி விளக்கம் பெறும் என்க.

குருவின் அருளால்தான் சாத்திர அறிவு பயன் கொடுக்கும் என்பதாம்.

118 மலங்களை ந் தாமென மாற்றி அருளித்
தலங்களை ந் தானற் சதாசிவ மான
புலங்களை ந் தானப் பொதுவினுள் நந்தி
நலங்களை ந் தானுள் நயந்தான் அறிந்தே.

குறிப்புரை :- மலங்கள் ஐந்து - ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி. தலங்கள் ஐந்து - சிவ சாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், மூர்த்தி சாதாக்கியம், கர்த்திரு சாதாக்கியம, கன்ம சாதாக்கியம் ஆகிய ஐந்து நிலைகள். இவை சதாசிவன் முதலான ஐவரையும் அதிபராக்கொண்டு இயங்குவன எனக. புலன்களைந்தான் - விஷய சுகத்தைப் பற்றுமல் செய்தவன். நலன்களைந்தான் உள் நயந்தான் அறிந்தே என்பது, உடலைப்பற்றி நிகழும் விஷய வாசனையான இன்பங்கள் அகநோக்குப் பற்றிய சாதகனிடம் நிகழாவாறு அகற்றினன் என்பதாம்.

நந்தியெம்பெருமான் சதாசிவன் முதலான மூர்த்தி பேதங்களாக எழுந்தருளி ஐந்து நிலைகளிலும் பொருந்தி விஷய சுகத்தை மாற்றியருளினன் என்பதாம். 6

119 அறிவைம் புலனுட னேநான் றிதாகி
நெறியறி யாதுற்ற நீராழம் போல
அறிவறி வுள்ளே அழிந்தது போல
குறியறி விப்பான் குருபர னாமே.

குறிப்புரை :- அறிவு - சீவன். நான்றநாய் - கூடினதாய். நெறி - வழி. ஐம்புலச் சேர்க்கையில் அழுந்தியவன் நீராழத்தில் அழுந்தியவன் கெடுவதைப்போலக் கெடுவான் என்க. அறிவு - சிவபோதம். அறிவுள் - சிவபோதத்துள் அழிதல் - தற்போத மற்று அடங்குதல். குறி - இலட்சியம். சிவபோதத்துள் அடங்கியவன் இலட்சியத்தை அடைவான் என்க.

குருபரன் சீவபோதம்கெட அருளுவான் என்பதாம். 7

120 ஆமேவு பால்நீர் பிரிக்கின்ற அன்னம்போல்
நாமே தனிமன்றில் தன்னந் தனிநித்தந்
தீமேவு பல்கர ணங்களுள் உற்றன
தாமேழ் பிறப்பெரி சார்ந்தவித் தாமே.

குறிப்புரை :- ஆமேவு பால் - பசுவின் பால். நித்தம் - நடனம். அம்பலவன் ஆடும் கூத்து அன்னம் பாலில் நீரைப் பிரிப்பதுபோல் சீவர்களது வினைகளில் தீயவற்றைப் பிரித்து விடும் என்க. எரி சார்ந்த வித்து - வறுத்த வித்து. வறுத்த வித்து முளையாதவாறுபோல் சீவர்களது கருவி கரணங்களால் ஈட்டிய வினைகளும் பயன் தரா என்க.

அம்பலவன் ஆட்டத்தினால் வினைகள் கெடும் என்பதாம். 8

121 வித்தைக் கெடுத்து வியக்கிரத் தேமிகச்
சுத்தத் துரியம் பிறந்து துடக்கற
ஒத்தப் புலனுயிர் ஒன்றாய் உடம்பொடு
செத்திட் டிருப்பர் சிவயோகி யார்களே.

குறிப்புரை :- வித்து - மூல கன்மம். கெடுத்து - முளையாத படி தடுத்து. வியாக்ரம் - மிக மேன்மையான இடம். மிகச் சுத்தத்துரியம் - நின்மல துரியாதீதம் துடக்கற - பந்தம் நீங்க. புலன் உயிர் ஒத்தலாவது, புலன் உயிர்வழி நிற்றல். செத்திட்டிருத்தல் - அறிவும் செயலும் இன்றியிருத்தல்.

சிவயோகியர் உடம்போடு இருந்தாலும் உலகவாதனை யற்றிருப்பர் என்பதாம். 9

122 சிவயோக மாவது சித்தசித் தென்று
தவயோக த்துள்புக்குத் தன்னொளி தானாய்
அவயோகஞ் சாரா தவன்பதி போக
நவயோக நந்தி நமக்களித் தானே.

குறிப்புரை :- சித்தசித்து - சித்து சடம். அவயோகம் - அடயோகம் முதலியன. நவயோகம் - தோழமைநெறி. நவ யோகமாவது, மூலாதாரத்திலிருந்து சுழுமுனை மார்க்கத்தில் ஏறிச் சென்னி நடுவில் உள்ள பிரமரந்திரத்திலிருந்த நிறைவான ஆன்ம ஒளியில் மனோலயமாதலாம்.

நந்தி சிவலோகம் அளித்தான் என்பதாம். 10

123 அளித்தான் உலகெங்குந் தானான உண்மை
அளித்தான் அமரர் அறியா உலகம்
அளித்தான் திருமன்றுள் ஆடுந் திருத்தாள்
அளித்தான் பேரின்பத் தருள்வெளி தானே.

குறிப்புரை : தானான உண்மை - உலகம் சிவமாய்க் காட்சி யளித்தல். அருள்வெளி - சிவபோதங் கெட்டுச் சிவன்வேறு என்று இல்லாத இடம்.

திருமன்றிலாடும் பெருமான் ஞானத்தை அருளினான் என்பதாம். 11

124 வெளியில் வெளிபோய் விரவிய வாறும்
அளியில் அளிபோய் அடங்கிய வாறும்
ஒளியில் ஒளிபோய் ஒடுங்கிய வாறும்
தெளியும் அவரே சிவசித்தர் தாமே.

குறிப்புரை :- வெளி - ஞானம். அளி - இச்சை. ஒளி - கிரியை.

பதியினது இச்சா ஞானக்கிரியைகளில் ஆன்மாவினது இச்சாஞானக்கிரியைகள் அடங்கி நிற்றலே சிவயோகம் என்பதாம். 12

125 சித்தர் சிவலோகம் இங்கே தெரிசித்தோர்
சத்தமும் சத்த முடிவுந்தம் முள்கொண்டோர்
நித்தர் நிமலர் நிராமயர் நீள்பர
முத்தர்தம் முத்தி முதல்முப்பத் தாறே.

குறிப்புரை :- சத்தமும் சத்தமுடிவும் - நாதமும் நாதாந்தமும். முத்தி முதல் - முத்திக்கு முதல். முப்பத்தாறு தத்துவங்களும் முத்திக்கு முதலாகவுள்ளன.

சித்தர்கள் இவ்வாழ்வைக்கொண்டு இங்கேயே முத்தி பெற்றவர் என்பதாம். 13

126 முப்பதும் ஆறும் படிமுத்தி ஏணியாம்
ஒப்பிலா ஆனந்தத் துள்ளொளி புக்குச்
செப்ப அரிய சிவங்கண்டு தான்தெளிந்
தப்பரி சாக அமர்ந்திருந் தாரே.

குறிப்புரை :- முப்பதும் ஆறும் - முப்பத்தாறு தத்துவங்களைக் கடந்தே ஒளிக்குள் புகவேண்டும் என்க. தான் தெளிந்து - தன்னைக் கண்டு. அப்பரிசாக - அச்சிவமேயாக.

தத்துவங்களை ஏணிப்படியாகக்கொண்டு ஒப்பற்ற சிவானந்த ஒளியில் புகுந்து இன்புற்றனர் என்பதாம். 14

(தொடரும்)

---

## விசேஷ நாட்கள்

### 11—10—70 முதல் 12—11—70 முடிய

11—10—70 நரசிங்கமுனையரைய நாயனார் திருநக்ஷத்திரம்.
12—10—70 பிரதோஷம்.
15—10—70 உருத்திரபசுபதி நாயனார் திருநக்ஷத்திரம்.
17—10—70 வேலூர் கிருத்திகை
22—10—70 சக்தி நாயனார் திருநக்ஷத்திரம்.
27—10—70 பிரதோஷம்.
28—10—70 பின்னிரவு தீபாவளி.
29—10—70 அமாவாசை.
30—10—70 மெய்கண்டதேவர் திருநக்ஷத்திரம்.
1—11—70 பூசலார் நாயனார் திருநக்ஷத்திரம்.
3—11—70 ஐயடிகள் காடவர்கோன் நாயனார் திருநக்ஷத்திரம்.
9—11—70 ஸ்கந்தஷஷ்டி.
10—11—70 பிரதோஷம்.



# அக்னி

வேதாந்த சிரோமணி,

**பிர்மஸ்ரீ. K. இராஜகோபால சாஸ்திரிகள்**

( மலர் 29, இதழ் 10, பக்கம் 559 இன் தொடர்ச்சி )

वैश्वानराय विद्महे लालीलाय धीमहि ।
तन्नो अग्निः प्रचोदयात् ॥ என்பது அக்னி காயத்ரீ.

சூரிய ஒளி மிகுதியாக உள்ள பகற்காலத்தில் அக்னி அதிகப் பிரகாசமாகத் தெரிவதில்லை. சூரியன் இல்லாத இரவு நேரங்களில் அதிகப் பிரகாசமாகக் காணப்படுகிறுன்.

सौरं तेजः सायमग्निं संक्रमते ।
आदित्यो वा अस्तं यन्नग्निमनुप्रविशति ॥
अग्निं वा आदित्यः सायं प्रविशति ।

என்ற வேதவாக்யங்கள் சாயங்காலம் சூரியன் அக்னியுள் நுழைந்துகொள்ளுகிறுன் என்பதைத்தெரிவிக்கின்றன. "दूरान्नक्तं ददृशे" என்ற வேதவாக்யம் அதன் காரணமாகவே இரவில் தொலைவிலிருந்தும் அக்னி காணப்படுகிறுன் என்றும் கூறுகிறது. இதைக் காளிதாஸ மகாகவியும்

स राज्यं गुरुणा दत्तं प्रतिपद्याधिकं बभौ ।
दिनान्ते निहितं तेजः सवित्रेव हुताशनः ॥

என்று திலீபனிடமிருந்து இராஜ்யத்தை அடைந்த ரகுவிற்கு, சூரியனிடமிருந்து ஒளியைப்பெற்று அதிகமாகப் பிரகாசிக்கும் அக்னியை உபமானமாகக் கூறுகிருர்.

வேதங்களில் சொல்லப்படும் யாகங்களில் அதிகமாக ஹவிர் பாகம் பெறுகிறவன் இந்திரன். இந்திரனுக்கு அடுத்தபடியாக

அக்னியே அதிகமாக ஹவிர்பாகம் பெறுகிறவன். ரிக் வேதத்தில் ஒவ்வொரு மண்டலத்தின் ஆரம்பத்திலும் அக்னியே வர்ணிக்கப் படுகிறான். சுமார் 200 ரிக்குகளுக்கு அதிகமாகவே அக்னிக்கு உள்ளன.

மேலும் ஹவ்யவாஹன், கவ்யவாஹன், ஸஹரக்ஷா என்று மூன்று பிரிவாக அக்னி கூறப்படுகிறார். தேவர்களுக்கு ஹவிஸைக்கொண்டு கொடுக்கும் அக்னி ஹவ்யவாஹன் என்றும் பிதிர்களுக்குக் கொண்டு கொடுக்கும் அக்னி கவ்யவாஹன் என்றும் அசுரர்களுக்கு ஹவிசைக் கொண்டு கொடுக்கும் அக்னி ஸஹரக்ஷா என்றும் பெயர்பெறுவர் என்பதை

"त्रयो वा अग्नयो हव्यवाहनो देवानां कव्यवाहनः पितृणां सहरक्षा असुराणाम्"

என்ற வேத வாக்கியம் உணர்த்தும்.

சிராத்தங்களிலும், வேள்விகளிலும் பிதிர்க்களுக்கும் தேவர்களுக்கும் ஹவிசைக் கொடுப்பதுண்டு. அசுரர்களுக்கு ஹவிசு கொடுக்கும் வழக்கமோ விதியோ இருப்பதாகத்தெரியவில்லையே. அசுரர்களுக்கு ஹவிசைக் கொண்டு கொடுப்பவன் ஸஹரக்ஷா என்று பெயர் பெறுவன் என்பது எப்படிப் பொருந்தும் என்று சந்தேகம் தோன்றலாம். சொல்லப்பட்ட விதிமுறை தவறிச் செய்யப்படும், சிராத்தங்களிலும் வேள்விகளிலும இடப்படும் ஹவிசு அசுரர்களுக்கே உரியதாகுமாதலின், அதைக்கொண்டு கொடுக்கும் அக்னி ஸஹரக்ஷா என்பது பொருத்தமேயாகும்.

யாகங்களுக்கு அக்னியைக் கடைந்து உண்டுபண்ணுதல் வேண்டும் என்று விதி. வன்னி மரத்தின் இரண்டு கட்டைகளை எடுத்து ஒன்றின்மேல் ஒன்றைப் பொருத்தி தயிர் கடைவது போல் கடைந்தால் அக்னி உண்டாகும். அக் கட்டைகளுக்கு அரணி என்று பெயர். இதை வேதம் अरण्योर्निहितो जातवेदाः என்று கூறுகிறது வன்னி மரத்தில் அக்னி மறைந்திருக்கிறது என்பதைக் காளிதாஸன் "शमीमिवाभ्यन्तरलीनपावकाम्" அக்னியை உள்ளேயுடைய வன்னிமரம்போல், கருவுற்ற சுதக்ஷிணை இருந்தாள் என்று உபமான முகத்தால் கூறுகிறான். அரணியிலிருந்து பலத்தால் கடைந்து பெறப்பட்டமையால் "सहसस्पुत्रः" (பலத்தால் பெறப்பட்டவன்) என்ற பெயர் வேதத்தில் கூறப்படுகிறது. மேலும் முதலில் வருணிக்கப்பட்டபடியால் सनः श्रुतः என்றும், ஹோம காலத்தில் புகையுடன் இருப்பதால் धूमकेतुः என்றும், இல்லறம் நடத்த சிறந்த துணை

வன் ஆதலின் गृहपतिः என்றும் செல்வம் பெறக் காரணமாதல் பற்றி रयीणां पतिः என்றும் பற்பல பெயர்களால் கூறப்படுகிருன்.

ஆகமங்களில் கூறப்படும் ஒன்பது அக்னிகளின் ஸ்வருபமும் இடமும், குண்டமும் வருமாறு :

1. ஒருமுகமும், மூன்று கண்களும், மூன்று பாதங்களும் உடையவராய், அக்ஷமாலே, சூலம், ஸ்ருக் இவற்றை வலது கைகளிலும், அங்குசம், உடுக்கை, ஸ்ருவம் இவற்றை இடது கைகளிலும் தரித்துக்கொண்டு மஞ்சள் ஆடை அணிந்து, வேதிகையின் கிழக்கு திக்கில் உள்ள சதுரமான குண்டத்தில் சுகாஸனத்தில் இருப்பவராய் ஆஹவனீயாக்கினியை த்தியானிக்க வேண்டும். இவரை செந்நிறமுடையவராகக் கூறுவர்.

2. இரண்டு முகமும், பொன்னிறமும், மூன்று கால்களும், சக்தி. வன்னி, சுருக், சுருவம், நெய்ப்பாத்திரம், தோமரம், விசிறி இவற்றைத்தாங்கிய ஏழு கைகளும், ஹிரண்யா முதலிய நான்கு நாக்குகளே வலது பக்கத்திலும், ஸுப்ரபா முதலிய மூன்று நாக்குகளே இடதுபக்கத்திலும் உடையவராய் அஜவாஹனத்தில் இருக்கும் தக்ஷிணுக்கினியை, வேதிகைக்குத் தெற்குப் பக்கத்தில் பிறைச் சந்திரன் போன்ற குண்டத்தில் தியானிக்க வேண்டும்.

3. இரண்டு கண்களும், வரத அபயமுத்திரைகளேயுடைய இரண்டு கைகளும், உடையவராய் வெண்மையான ஆடையுடையவராய் ஸகலவித ஆபரணம் பூண்டவராய், தாமரை ஆஸனத்திலிருக்கும் கேவலாக்னியை வேதிகையின் வடக்கே தாமரைபோன்ற குண்டத்தில் தியானிக்கவேண்டும்.

4. வேதிகையின் மேற்கே வட்டமான குண்டத்தில் கார்ஹபத்யாக்னியை, சிவந்த அங்கமும் ஆடையுமுடையவராயும், வரத அபயமுத்திரைகளே உடையவராயும் மேல் இரண்டு கைகளில் சுருக் சுருவம் தாங்கியவராயும் ஒருமுகமும் ஏழு நாக்குகளுடன் கூடியவராயும், சடைதரித்தவராயும், குதிரையில் ஏறியவராயும் தியானிக்கவேண்டும்.

5. நான்கு கை, மூன்றுகண், ஒருமுகம் சடை இவற்றைத் தரித்துக்கொண்டு காளேயின்மேல் ஏறிய விருத்தாக்கினி வெண்ணிறமுடையவர். நான்கு கைகளிலும் சூலம், பரசு (கோடாலி) வரதம் அபயம் இவற்றையுடையவர். இவர் வேதிகையின் தென்கிழக்கில் அரச இலேபோன்ற யோனி குண்டத்தில் தியானிக்கப் படுவார்.

6. இரண்டுமுகம், நான்கு கொம்பு, அபயம், சக்தி, சுருக், சுருவம், வரதம், கேடயம் அக்னி இவற்றை ஏந்திய கைகள் உடைய ஸாமான்யாக்கினியை வேதிகையின் வடகிழக்கேயுள்ள எட்டுப் பட்டையான குண்டத்தில் தியானிக்கவேண்டும்.

7. வேதிகைக்குத் தென்மேற்குத் திக்கில் முக்கோணமான குண்டம். விருஷபத்தில் ஏறிய யௌவனக்னி இங்கு தியானிக்கப்படுவார். ஐந்து முகமும் மூன்று கண்களும், சிவந்த அங்கமும் உடையவர். வலது பக்கத்திலுள்ள ஐந்து கைகளில் சூலம், பரசு, கத்தி, அபயம், வஜ்ரம் இவற்றையும் இடது பக்கத்திலுள்ள ஐந்து கைகளில் உளி, பாசம், தாமரை, சக்ரம், வரதம் இவற்றையும் தரித்தவர் யௌவனக்னி.

8. மும்மூன்று கண்ணுடைய இரண்டு முகமும், ஏழு நாக்குகளும், நான்கு கொம்புகளும் மூன்று கால்களும் செந்நிறமும் உடையவர் பாலாக்னி. இவர் காளையில் ஏறியிருப்பார். தோமரம், விசிறி, நெய்ப்பாத்திரம் இவற்றை ஏந்திய மூன்று இடது கைகளையும் சுருக், சுருவம், அக்ஷமாலை, சக்தி இவற்றை ஏந்திய நான்கு வலக்கைகளையும் உடையவர்.

9. வேதிகையின் தென்கிழக்கிற்கும், கிழக்கிற்கும் நடுவில் வட்டமான குண்டம். இதில் சிவாக்னி தியானிக்கப்படுவார். இவர் தாமரையில் இருப்பவர். ஐந்து முகம், பத்துக் கை, செந்நிறம் மூன்று கண்கள் உடையவர் சூலம், வஜ்ரம், கத்தி, பரசு, அங்குசம், கதை, தண்டம், பாசம், தாமரை, சக்ரம் இவற்றைக் கைகளில் தரித்தவர். ஏழு நாக்குகள் உடையவர். ஸ்வாஹா ஸ்வதா என்ற இரு மனைவியோடு கூடியவர். இவ்விதம் குண்டத்தில் சிவாக்கினியைத் தியானிக்க வேண்டும்.

இங்குக் கூறப்பட்ட அக்னிகளின் பெயரோ, திசையோ பிரதான மூர்த்தி எந்த தெய்வமாக இருப்பினும் மாறுவதில்லை. குண்டங்கள் பிரதான மூர்த்திக்கு ஏற்றவாறு மாற்றிக் கூறப்படும். தந்திர பேதத்தால் அக்னியின் ஸ்வரூபத்திலும் அணி, ஆயுதம், ஆடை முதலியன மாறிச் சில பேதங்கள் காணப்படுகின்றன. சிவாக்னி பிரதான அக்னி. தேவி யாகமாயின் ஸர்வமங்களாக்னி என்றும் சுப்பிரமணிய யாகமாயின் குஹாக்னி என்றும் இம்மாதிரி பிரதான அக்னியின் பெயரையும் மாற்றிச் சிலர் கூறுகின்றனர். ஆனால் சிவாக்னிக்குரிய தியானதிகளிலேயே அந்தந்த அக்னியையும் தியானிக்கின்றனர்.

( தொடரும் )

# உயிருண்ணிப் பத்து - ஒரு நோக்கு

செஞ்சொற்கொண்டல், புலவர்,

திரு. சொ. சிங்காரவேலன் M. A., Dip.Ling.

திருவாசக உண்மை :

மாணிக்கவாசகர் இறைநிறைவில் அடங்கி இறவா இன்பம் துய்க்கும் நிலையைத் தம் திருவாசகத்துட் பல இடங்களில் கூறி மகிழ்கின்றார்; சிவானந்த மேலிடுதலாக அவ்விடங்கள் அனைத்தையும் குறிக்கலாமேனும், 'உயிருண்ணிப் பத்து' என்னுந் தலைப்புடைய பதிகத்தை மட்டுமே சிவானந்த மேலிடுதல் என்று குறிப்பது மரபு.

"இழைத்தேனிவ் வாக்கை பொறுத் தினிக்கணமும்
பொறுக்கலேன் ஏழையேனைக்
குழைப்பதேன் பிழைபொறுத்தா ளெனவிரங்கிக்
கூறுதலே குழைத்தபத்தாம்
தழைத்துவளர் பேரின்பம் தானாகி
உயிர்தோன்றாத் தன்மை யாய்த்துன்
பொழித்துநிறை வைப்பெறுதல் உயிருண்ணிப்
பத்தாவிங் குரைத்ததாமே"

என்ற திருவாசக உண்மைப் (16) பாட்டின் பிற்பகுதி, உயிருண்ணிப் பத்து, உயிர் தோன்றாத் தன்மை அடைந்து நிறைவு பெறுதலை உரைப்பது என்று விளக்குதலும் காணலாம்.

இப்பகுதியில் இந்தத்தன்மை எடுத்து உணர்த்தப் பெறும் இயல்பை இங்குச் சிந்திப்போம்.

நினைந்து இன்புறுதல் :

முதற்பாட்டிலே தான் பெற்ற பேரருளை நினைந்து நினைந்து இன்புறுகின்றார் மணிவாசகர். "செவ்விய நாவன்

மையை உடைய புலவர் போற்றும் புகழை உடைய திருப் பெருந்துறையில் உறையும் பெருமானே! பசிய நாவினை உடைய பாம்பின் படத்தை ஒத்த அல்குலை உடைய உமை பாகமாகத் தோன்றி, நாள்தோறும் என்னுடைய உடலை விட்டு நீங்காத வினைகளைத் தொலைப்பவனே! விடைப் பாகனே? இனி யான் எந்நாளிலே மகிழ்ந்து எந்நாளிலே இறுமாந்திருப்பேன்" என்பது இம்முதல் அருட்பாட்டு மொழியும் செய்தி.

மூன்றின் கலப்பு :

உயிர் உண்ட செய்தியை அடுத்து எழும் அநுபவம் பேசுகின்றது; 'ஊனார் உடல் புகுந்தான் உயிர் கலந்தான் உளம் பிரியான்' என்று, தம் ஊனுயிர் கலந்த அருமைப் பாட்டை இதைவிடத் தெளிவாக எடுத்துரைத்தல் இயலா தன்றோ? தேனார்ந்த சடைமுடியை உடையவனும், திருப் பெருந்துறையில் உறைபவனும் ஆகிய பெருமான்; வானோர் களாலும் அறிய முடியாத ஒரு வளம் எனக்கு ஈந்தனன்; அது என் உயிர்கலந்து உளம்பிரியாப் பெற்றியே ஆம் யாதொரு தகுதியும் இல்லாதேனாகிய யான் திருவடியை எய்துதற்பொருட்டு இவ்வாறு ஈந்தனன்' என்கின்றார் அரு ளாளர்; இது இழிந்த நாய் ஒன்றற்குத் தவிசு இட்டு இருக்க வைத்ததனோடு ஒக்கும் பெருங்கருணை என்பதனை, 'ஒரு நாய்க்குத் தவிசு இட்டு' என்றுரைக்கின்றார்கள், உயிர் உண்ணியாகிய சிவபிரான், உடல், உயிர், உள்ளம் ஆகிய மூன்றின் கண்ணும் அடிகளாரோடு கலந்து இன்பம் ஊறிடச் செய்தனன் என்பது இப்பகுதியால் தெளிவாகும் உண்மை ஆகும்.

செம்மாப்பின் செம்மை :

தன் உடலும், உயிரும், உள்ளமும் தன்வயமின்றி பர வயப்பட்டு நின்றநிலையில் தம்மநுபவத்தை எடுத்துக் கூறிச் செம்மாக்குந் திருப்பாட்டு அடுத்த நிலை. 'நிர்விகற்ப சமாதி யில் ஜகத் இல்லை; ஜீவன் இல்லை; காலதேச வர்த்தமானம் இல்லை; பரம் ஒன்றுதான் உள்ளது' என்று வேதாந்தியர் கூறும் பகுதி இங்கு நினைக்கத்தக்கது ஆம். சுத்தநிலை

சகலாவத்தையைக் கடந்தது ஆதலின் அங்கு நிற்கும் அடிகளார்க்கு இந்த அநுபவம் தலைப்படுகின்றது.

" எனை நான் என்ப தறியேன்பகல்
இரவாவதும் அறியேன்
மனவாசகம் கடந்தான்எனை
மத்தோன் மத்தனுக்கிச்
சினமால்விடை உடையான்மன்னு
திருப்பெருந்துறை உறையும்
பனவன்எனைச் செய்த படிறு
அறியேன் பரஞ்சுடரே "

'உயிர் உண்ணி' என்ற அரியதொகை இறைவனைக் குறிக்க எத்துணைப் பொருத்தமானது? உயிரை உண்டு தன்னுட் கரக்கும் பரங்கருணையையே அன்றோ 'உயிர் உண்ணி' என்பது விளக்கிக் காட்டுகின்றது. "மனத்தையும் சொல்லையும் உடலையும் கடந்தவன் மேலான ஒளிப் பிழம்புபோல்வான், என்னைக் களிப்புமிகுந்த பித்தனுக்கி எனக்குச் செய்த சூழ்ச்சியை அறியேன்; தான் யாரென்பதனையும் அறிந்திலேன்; பகலும் இரவும் கழிந்ததனையும் உணர்ந்திலேன்; என்பது இதன் பொருள்.

**வியக்கும் திறம் :**

அடுத்த நிலையில், இவன் எனக்குச் செய்த பேருதவியைப் போல் உலகிற் பிறர் உளரோ செய்திடற்கு என்று வியந்து மகிழும் பாடல் பிறக்கின்றது. "பெருந்துறையில் உறைபெம்மான் மனத்தான்; கண்ணின் உள்ளான்; என் சொற்களினும் உள்ளான். எனைத்தான் வலிதாகப்புகுந்து ஆண்டான்; எனது என்பின் உட்டுளைகளையெல்லாம் உருகுவித்து என்னுள் முழுதும் விரவி என்னை ஆட்கொண்டான்" என்கின்ருர் இங்கு. 'இரும்புதரு மனத்தை உருக்கி' என்பினூடும் உருவிடுகின்ற பேரன்பினன்; 'உருகுவது ஆகிய உள்ளம் கொண்டு அள்ளூறு ஆக்கை அமைத்தனன்' என்றெல்லாம் பேசுகின்ருர் அடிகள். பிறபகுதிகளுள்ளும், 'என்னுளே உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு என்னுளே நிற்கும் இன்னம்பர் ஈசனே' என்ற அப்பர் திருவாக்கும் இங்கே நினைக்கத்தக்கது.

கருணையின் கனிவு :

அடுத்து, உலகப்பற்றிலேயே கிடந்து உழலும் மற்றைய வரும் இந்த இன்பப்பேற்றை அடைந்திடல் வேண்டும் என்ற பெருங்கருணை அடிகளார் உள்ளத்திற் பெருக்கெடுக் கின்றது. இம்மை, மறுமை இரண்டையும் இழந்து நிற் போரைத் தம் கரையற்ற கருணையால் அடிகள் கனிந்து விளித்து அருளிச்செய்யும் திறம் நன்கு உணரத்தக்கது.

அன்பின் ஆழம் :

"இடையறுது வரும் கடல் அலைகள் போன்று தொடர்ந்து வரும் கலக்கமும் மலமும் அறுத்து என் உடலும் உயிரும் புகுந்து ஒழியா வண்ணம் நிறைந்தான்" என்று அடுத்து உரைத்து அகம் களிக்கின்றார். இதற்கு அடுத்த நிலையில் இம்மை மறுமை நலங்களைச் சிறிதும் விழையாத நிலை கூறப் படுகின்றது. சிவானந்தமாகிய 'உயிர் உண்ணி' மேலீட்டால் 'புகழ் வேண்டேன்; செல்வம் வேண்டேன்; மண்ணும் விண்ணும் வேண்டேன்; பிறப்பு இறப்பு வேண்டேன்; சிவம் வேண்டார் தம்மைத் தீண்டேன்; திருப்பெருந்துறைச் சேர்ந்தேன்; இறைதான் பூண்டேன்" என்று கூறும் அடிகளார், தாம் அத்திருவடிகளுக்குப் புறமாகச் செல்ல மாட்டார் என்றும், அவற்றையும் தமக்குப் புறமாகச் செல்ல விடமாட்டார் என்றும் கூறி முடிக்குந் திறம் அவரது அன்பின் ஆழத்தையே அறிவிக்கின்றது.

"இறைதான் பூண்டேன்; புறம்போகேன்;
இனிப்புறம் போகலொட்டேனே"

என்ற இப்பகுதியில்தான் எத்தனை அருள்வீரம் ததும்பி வழிகின்றது இச்சிவானந்த இன்பத்தை எப்படி விண் டுரைப்பது என்று இங்கு மேலும் அடிகளுக்கு எண்ணம் விரிகின்றது 'கொம்புத் தேன் என்பேனோ ? கடல் அமுது என்பேனோ ?' என்று கூறும் அடிகள் அந்தப் பேரின்ப அநுபவத்தில் - துய்க்கும் நிலைக்கு ஆற்றுதவராக "ஆற்றேன்" என்று உறைக்கின்றார்; இந்த ஒரே சொல் எவ்வளவோ பொருள் உணர்ச்சி உடையதாய்ப் பூத்துள்ளது என்று கூறலாம்.

'சீவன் முத்தி நிலையில் இருப்பினும் அதனால் அமை யாது பரமுத்தி விரும்புவாராக' ''எச்சம் அறிவேன்; எனக் கிருக்கின்றதை அறியேன்'' என்கின்றார்.

அருளும் ஆனந்தமும் :

இறுதியாக இத்திருப்பத்தின் கடைநிலைக் கவிதை, 'தாம் காட்டில் உள்ள மரம் ஒன்றிற்கும் பயன்படாது வீணே முதிர்ந்து வற்றி மட்கி மடிந்திடல் போல வீணே அரும் பொருளாய் விளங்கும் இறைவனை அடைய விரும்பி முயன்றிடுவதாக உரைப்பது'

"வான் பாவிய உலகத்தவர் தவமே செய, அவமே
ஊன் பாவிய உடலைச் சுமந்தடவிம் மரம் ஆனேன்''

நான் பாவியனாக இருந்து கொண்டு இந்நாள் வரை நீ நல்க வில்லை நல்லருளை என்று வெறுத்தல் முறையன்று என்று தம்மை வெறுப்பாராய்,

" நான்பாவியன் ஆனால் உனை நல்காய் எனலாமே''

என்று இசைக்கின்றார் அடிகள்.

இவ்வாறு அடிகள் உயிருண்ணிப்பத்து முழுவதினும், தம் உயிரை உண்ணும் சிவானந்த மேலீட்டைப் பற்றியே உரைத்திருத்தல் காணலாம். அந்த ஆனந்த மிகுதியால் பொங்கி எழுந்த பாட்டுக்களே இப்பத்து முழுமையும் உள்ளன என்று கூறலாம். 'உயிரைத் தூய்மைப்படுத்துவது சிவனுடைய அருளும், உயிரைத் தன்னுட் படுத்துக்கொள் வது சிவனுடைய ஆனந்தமும்' என்றுரைப்பர். இங்குத் தன்னுட்படுத்துக்கொண்டு தழைத்து விரியும் சிவனுடைய ஆனந்தம் செந்தமிழ்க் கவிதையாகப் பொங்கி வழிகின்றது

சிவனுக்குரிய பத்துறுப்புக்களில், அவனுடைய 'ஆனந் தமே' அவனுக்குரிய ஆறாகக் கொள்ளப்படும். ஆனந்தங் காண் உடையான் ஆறு' என்றும், 'ஆனந்தம்மே ஆறா அருளியும்' என்றும் திருவாசகத்துள் வரும் பகுதிகள் இதனைத் தெளிவுறுத்தும்.

' ஆர்த்த பிறவித் துயர்கெட நாம் ஆர்த்தாடும் தீர்த்தன்' என்று மணிவாசகர் பாடி மகிழ்வர். நாம் ஆர்த்து ஆடித் திளைக்கும் தீர்த்தமாகச் சிவபிராஞகிய கடவுளே உள்ளான் என்று கூறப்படுவதனுல், தன்னுட்படுத்து ஆட்கொள்ளுவது சிவானந்தமே யாதல் இனிது விளங்குவதாகும்.

' எம்பிரான் என்னைப் பின்னைத் தன்னுளே கரக்கும் '

என்னும் அப்பர் திருவாக்கும் இப்பொருளதேயாம்.

கவிதையும் உளவியல் நோக்கும் :

மணிவாசகர் பாடியுள்ள இவ்வொரு திருப்பத்தின் பொருள் அமைப்புமுறை இவ்வாறு உள்ளது. இதனுள் வரும் ஒவ்வொரு பாட்டும் ஒவ்வோர் நிலையில் மணிவாசகரைக் காண உதவுகின்றது. அவரைப்போன்ற அருளாளர்கள் பல நிலைகளில் நின்று பாடிய தன்னுணர்ச்சிக் கவிதைகளைப் பொருள்கொள்ளும் நெறி இது. இவ்வாறு பொருள்நெறி தலைப்பட்டாலேயே அவர்கள் திருவுள்ளத்திற்கு மிக அண்மையில் நாம் நம்மைக் கொண்டுசெல்ல இயலும். பல நிலைகளில் இவ்வாறு பகுத்துணர்ந்து கொண்டால், ஒருநல்லாசிரியர் அல்லது கவிஞர் கொண்ட உள்ள நிலைகளின் உண்மைத் தோற்றங்கள் இனிது புலனும். கவிதையை இவ்வாறு உளவியல் நிலைகட் கேற்ப அமைத்துக் கற்பது ஒரு புதிய அநுபவமே. அதனுல் விளையும் விழுப்பயன் கவிதைக் கலையை ஆராய்வோர்க்குப் புத்தொளி காட்டும். மணிவாசகரது உயிருண்ணிப் பத்துச் சிந்தனை இவ்வாறே அனைத்தினையும் உற்று நோக்கவும், நோக்கி உணரவும் துணைபுரியும் என்பது இக்கட்டுரையாசிரியனின் ஆழ்ந்த நம்பிக்கை.





# செய்திகள்



## ஸ்ரீ துர்க்காம்பிகைத் திருக்கோயிலில் சதசண்டியக்ஞம்

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனத்தில் திருக்கோயில் கொண்டு அருள் வழங்கும் ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலக்ஷ்மி துர்க்காதேவி ஆலயத்தில் இருபதாவது சதசண்டியக்ஞ விழா 1—10—70 வியாழக்கிழமை முதல் தொடங்கி நடைபெற்றது.

29—9—70 செவ்வாய்க்கிழமை காலே கணபதி ஹோமமும், 30—9—70 புதன்கிழமை யஜமான அனுக்ஞை. தேவி அனுக்ஞை, விக்னேஸ்வரபூஜை. அங்குரார்ப்பணம், ரக்ஷாபந்தனம் முதலியனவும், 1—10—70 வியாழக்கிழமை கடஸ்தாபனமும், சண்டியக்ஞ பூஜாரம்பமும் நடைபெற்றன. நாள்தோறும் காலே மாலே இருவேளைகளிலும் சண்டியக்ஞம் நடைபெற்றது.

6—10—70 செவ்வாய்க்கிழமை மாலே வில்வவிருக்ஷாபிமந்த்ரணமும், 7—10—70 புதன்கிழமை காலே நவபத்ரிகாக்ரகணமும், 8—10—70 வியாழக்கிழமை அஷ்டாதச ஆயுத மண்டல பூஜையும், 9—10—70 வெள்ளிக்கிழமை சப்தசதி ஹோமமும், மகாபூர்ணுகுதி தீபாராதனையும் நடைபெற்றன.

10—10—70 சனிக்கிழமை காலே யாகசாலேயிலிருந்து கடம் புறப்பாடாகி ஸ்ரீ துர்க்கா தேவிக்கு அபிஷேகமும் சப்தசதியக்ஞ கலசாபிஷேகமும் சதசண்டி யக்ஞ பூர்த்தியும் நடைபெற்றன

1—10—70 முதல் 10—10—70 முடிய உள்ள நவராத்திரி விழா நாட்களில், ஸ்ரீ மகாலக்ஷ்மி துர்க்காதேவி சந்நிதியில், சுவாசி நீ குமாரீ வடுபூஜை, சதுர்வேத பாராயணம், துர்க்கா ஸூக்த பாராயணம், திருமுறைப் பாராயணம் அபிராமி அந்தாதி பாராயணம், கொலு அலங்காரங்கள் முதலியன நடைபெற்றன.

ஸ்ரீ மகாலக்ஷ்மி துர்க்காதேவிக்கு லக்ஷார்ச்சனை, ஸ்ரீ வித்யா சக்ரமாகிய மேருவிற்கு சகஸ்ரநாமார்ச்சனை, விசேஷ அபிஷேக அலங்கார ஆராதனைகளும் நடைபெற்றன. 10—10—70 அன்று எட்டு கோடியே பன்னிரண்டாவது லக்ஷார்ச்சனை பூர்த்தியும்.

பதின்மூன்றுவது லக்ஷார்ச்சனைத் தொடக்கமும் நடைபெற்றன. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் காலை மாலை இருவேளைகளிலும்எழுந்தருளிவழிபாடாற்றினர்கள். அன்பர்கள் பலர் வழிபட்டு அருள் பெற்றனர்.

## தருமையாதீனக் கல்வி நிலையங்களின்
# கலைமகள் விழாச் சொற்பொழிவு நிகழ்ச்சிகள்

தருமையாதீனக் கல்வி நிலையங்களின் சார்பில் கலைமகள் விழா 1—10—70 முதல் 10—10—70 முடிய மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. திருநெறிய தெய்வத்தமிழ் மன்றத்தில் நாடொறும் மாலை மூன்றுமணி முதல் தொடங்கி சொற்பொழிவு நிகழ்ச்சிகள் சிறப்புற நடைபெற்றன. இறைவியின் நினைவைச் சிறப்பிக்கும் ஒப்பற்ற சிற்றிலக்கியங்களும், அம்பிகையின் அருள் பெற்ற அமரத்தன்மை வாய்ந்த தமிழ்க் கவிஞர்களின் ஆற்றல் களும், இலக்கியங்களில் ஒன்பான் சுவைகளும் நாடொறும் ஆராய்ந்து பேசப்பெற்றன பேராசிரியப் பெருமக்கள் பலரும், மாணவர்களும் விழாவில் பங்கேற்று ஆய்வுரை வழங்கினர். நாடொறும் ஆதீனக் கல்வி நிலைய மாணவ மாணவியர் சிறப்பு மிகு கலை நிகழ்ச்சிகள் நிகழ்த்தி மகிழ்வித்தனர். மாணவமாணவி யரும் பொதுமக்களும் திரளாகப் பங்குபற்றிச் சிறப்பித்தனர்.

1—10—70 வியாழன் முதல் நாள் விழாவில் ஆதீனப் பல்கலைக் கல்லூரி முதல்வர் திரு வி. சா. குருசாமி தேசிகர், ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்பள்ளித் தலைமையாசிரியர், திரு. விவேகானந்தம், பல்கலைக் கல்லூரி நிறைநிலை மாணவர் வெ சுப்பிரமணியன் ஆகிய மூவரும் முறையே "கன்னியா குமாரி, பாரதி, நகை" என்ற பொருள்களில் உரையாற்றினர்.

2—10—70 வெள்ளி இரண்டாம்நாள் விழாவில் 'திருஞான சம்பந்தர், கம்பர் அழுகை" ஆகிய தலைப்புக்களில் முறையே தேசிய உயர்பள்ளித் தமிழாசிரியர்கள் திரு. ஆ. இராமபத்திரன், திரு கே. கே. நடராசன், பல்கலைக்கல்லூரி நிறைநிலை மாணவர் ஜி. கலியபெருமாள் மூவரும் சிறப்புரையாற்றினர்.

3—10—70 சனியன்று மூன்றும்நாள் விழாவில் பேராசிரியர் திரு. வி. சபேசன், மீனுட்சி என்ற தலைப்பிலும், நகராட்சி உயர்பள்ளித் தமிழாசிரியர் திரு. எம். சுந்தரேசம் பிள்ளை காளமேகம் என்ற தலைப்பிலும், பல்கலைக் கல்லூரி நிறைநிலை மாணவர் கே. இராசகோபாலன் இளிவரல் என்ற தலைப்பிலும் உரை நிகழ்த்தினர்

4—10—70 ஞாயிறன்று நான்காம் நாள் விழாவில் பேராசிரியை திருமதி ப. நீலா பார்வதவர்த்தனி என்பது பற்றியும், அ. வ. அ. கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் திரு. சொ. சிங்காரவேலனுர் தையல்நாயகி என்ற தலைப்பிலும், பல்கலைக் கல்லூரி நிறைநிலை மாணவர் திரு. சோ. வெற்றிக் கண்ணன் மருட்கை என்ற தலைப்பிலும் சிறப்புரை நிகழ்த்தினர்.

5—10—70 இங்களன்று ஐந்தாம் நாள் விழாவில் பேராசிரியர் திரு. இரா. செல்வக்கணபதி பராசக்தி என்ற பொருளிலும், நகராட்சி உயர்பள்ளித் தமிழாசிரியர் திரு. சி. இராமமூர்த்தி திருநாவுக்கரசர் என்ற பொருளிலும், பல்கலைக் கல்லூரி நிறைநிலை மாணவர் டி. ஜி. கலியபெருமாள் அச்சம் என்ற பொருளிலும் உரையாற்றினர்.

6—10—70 செவ்வாயன்று ஆரும் நாள் விழாவில் தேவார பாடசாலைத் தலைமையாசிரியர் திரு. ஆர். வேலாயுத ஓதுவார் திரிபுரசுந்தரி என்ற தலைப்பிலும், ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர் பள்ளித் தமிழாசிரியர் திரு. வே. கண்ணப்பன் குமரகுருபரர் என்ற தலைப்பிலும், பல்கலைக் கல்லூரி நிறைநிலை மாணவர் திரு. இரா. சின்னையன் பெருமிதம் என்ற தலைப்பிலும் உரையாற்றினர்.

7—10—70 அன்று தருமையாதீன ஆகம பாடசாலை ஆசிரியர் திரு. இராஜகோபால சாஸ்திரிகள் "சிவகாமசுந்தரி" என்ற தலைப்பிலும் ஆதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர் மகாவித்துவான் திரு. அருணைவடிவேலு முதலியார் அவர்கள் "காந்திமதி" என்ற தலைப்பிலும், ஆதீனப் பல்கலைக் கல்லூரி மாணவர் திரு. க. அன்பழகன் "வெகுளி" என்ற சுவை பற்றியும் சொற்பொழிவாற்றினர்.

8—10—70 அன்று அன்பநாதபுரம் வகையார் அறத்துறைக் கல்லூரி, தமிழ் விரிவுரையாளர் திரு அ. கலியபெருமாள் M.A. அவர்கள் "அபிராமி" என்ற தலைப்பிலும், ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் திரு. ப. சிவராமகிருஷ்ணன் B A, B T. அவர்கள் "இராமகிருஷ்ணர்" பற்றியும், சொற்பொழிவாற்றினர்.

9—10—70 அன்று அன்பநாதபுரம் வகையார் அறத்துறைக் கல்லூரி தமிழ்விரிவுரையாளர் திரு. அ. பாலருவாயன் M.A., அவர்கள் "அகிலாண்டநாயகி" என்ற தலைப்பிலும், ஆதீனப் பல்கலைக் கல்லூரி மாணவர்கள் திரு. சோ. கார்த்திகேயன்,

திரு. நீ. சஞ்சீவி இருவரும் முறையே "கொற்றவை" பற்றியும் "சமநிலை" என்ற சுவை பற்றியும் சொற்பொழிவாற்றினர்.

10–10–70 அன்று தருமையாதீன வேதசிவாகமபாடசாலைத் தலைமையாசிரியர் சிவஸ்ரீ. சுவாமிநாத சிவாச்சாரியார் "காளிதாசர்" பற்றியும், ஆனந்ததாண்டவபுரம் திரு. இராமதாசய்யர் அவர்கள் 'நவசக்தி" என்ற தலைப்பிலும், ஆதீனப் பல்கலைக் கல்லூரி மாணவர் திரு. கோ. முத்தையன் "அறம்" என்ற தலைப்பிலும் சொற்பொழிவாற்றினர்.

ஆதீனக் கல்விநிலையங்களின் கலைமகள் விழாவில் பத்து நாட்களும் ஆதீனக் கல்வி நிலையங்களான ஸ்ரீ குருஞானசம்பந்தர் துவக்கப்பள்ளி மாணவிகளாலும், ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப்பள்ளி மாணவிகளாலும் கலைநிகழ்ச்சிகள் நடத்தப் பெற்றன. அன்பர்கள் பலர் கண்டும் கேட்டும் மகிழ்ந்தனர்.

### சென்னை, தருமையாதீன மடாலய தேவாலய சமயப் பிரசார நிலையத்தில்

## நவராத்திரி விழா

சென்னை, தியாகராயநகரில் உள்ள தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தில் 1—10—70 நவராத்திரி முதல்நாள் விழாவைத் தொடங்கிவைத்து உயர்நீதிமன்ற நீதிபதி திரு. என். கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்கள் பேசியதாவது :—

"கடவுள் அம்மை அப்பராகவே இருக்கின்றார். அம்மையையோ அப்பனையோ பிரிக்கமுடியாது. அம்மை என்பது 'பவர்' அல்லது 'சக்தி' என்று சொல்லலாம். அப்பன் என்பது 'சிவம்' அல்லது 'சக்தி'யைச் செலுத்தும் பொருள் என்று சொல்லலாம். உலகம் நடைபெற அருள் அல்லது கருணையும் வேண்டும். அதே நோத்தில் நீதி அல்லது நேர்மையும் வேண்டும். அருவாக இருப்பவர் அம்மை; நீதியாக இருப்பவர் அப்பன். இவ்விரண்டையும் பிரிக்கமுடியாது என்பதைத்தான் அர்த்தநாரீசுவர (பாதிப் பெண்ணுருவன்) வடிவத்தில் காண்கிறோம். ஆதலால் நாமும் ஆணும் பெண்ணுமாக வாழ்கின்றோம். நம்மிடையே நீதியும் கருணையும் நீங்காமல் வாழ்க்கையை நடத்தவேண்டும். நீதி தவறினால் குற்றம்; கருணையின்றி வாழ்ந்தாலும் குற்றமாகும். இங்கு மீனாட்சியம்மைக்கு லலிதா சகஸ்ரநாமார்ச்சனை நடைபெற்றது. அபிராமி அந்தாதியும்

பாராயணம் நடந்தது. ஆதலால் மீனுட்சி அருள் பற்றியும், அபிராமி அருள் பற்றியும் ஒவ்வொரு குறிப்புச் சொல்ல நினைக்கிறேன். கி, பி. 1812 ல் மதுரையை ஆட்சிசெய்த ரௌஸ்பீட்டர் என்ற வெள்ளைக்காரக் கலெக்டர் தினம் குதிரை சவாரி செய்யும் போது அவரை அறியாமலே மதுரை மீனுட்சிகோயில் மாட வீதியை வலமாக வருவது வழக்கம். அதன் பயனுக ஒருநாள் மீனுட்சியம்மை சிறு குழந்தையாக அவர் பங்களாவிற்கு வந்து இக்கட்டிடம் விழப்போகின்றது; வெளியேவா என்று அழைத்தது. கலெக்டர் வெளியே வந்தவுடன் கட்டிடம் இடிந்து விழுந்தது. அக்கிறித்துவக் கலெட்டர் மீனுட்சியம்பாளுக்கு விலையுயர்ந்த தந்தப் பல்லக்கு செய்துவைத்துள்ளார் அதை இன்றும் காணலாம். அடுத்து என் வாழ்க்கையில் நடந்தது: ஓராண்டிற்கு முன்பு என் மனைவி பூசை அறையில் பூசை செய்து விட்டு, கற்பூர ஆரத்தி எடுத்து எல்லாப்படங்களுககும் காட்டும் போது சேலையில் தீப்பிடித்து கீழிருந்து இடுப்புவரை பரவி விட்டது. ஆரத்தி எடுத்த என் மனைவி அதுவரை கவனிக்க வில்லை ஆரத்தி முடிந்து கவனித்தவர் அபிராமி என்று ஒரு சப்தம் போட்டார். பக்கத்தில் இருந்த நான் உள்ளேபோய் பார்த்தபோது சேலைமட்டும் எரிந்ததேதவிர உள்பாவாடையில் கூட தீப்பற்றிய அடையாளம் ஏதும் இல்லை. உடம்பிலும் தீக் காயம் சிறிதுகூட இல்லை. உடனே அபிராமி அம்மைக்குப் பிரார்த்தனை செய்துகொண்டோம். மூன்று மாதத்திற்கு முன்பு தான் திருக்கடையூர் சென்று அபிராமி அம்மைக்கு ஒரு பட்டுப் புடவை சார்த்தி தரிசித்தோம். இப்படி அம்மை தன்னை அறிந்து வழிபடுவோர்க்கும், அறியாமல் வழிபடுவோர்க்கும் அருள் செய்து வருகிறுர்'' என்று குறிப்பிட்டார்கள்

அடுத்து பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர், பேராசிரியர், திரு. அ. மு. பரமசிவானந்தம் அவர்கள் விழாவிற்குத் தலைமை வகித்துத், தமிழ் இலக்கியங்களில் அம்மை பேசப்பெற்றிருப்பதை விளக்கிப்பேசினர்கள். மாயூரம் பிர்மஸ்ரீ இராமநாத தீக்ஷிதர் அவர்கள் தேவி பாகவதத்தில் தேவியின் பெருமைப்பற்றி விரிவுரையாற்றினர்கள் தவத்திரு. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் வரவேற்புரையும் நன்றியுரையும் கூறும்போது இவ்வொன்பதுநாட்களும் தருமபுரத்தில் ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலக்ஷ்மி துர்க்காபரமேஸ்வரிக்கு நடைபெற்றுவரும் சதசண்டியக்ஞத்தின் சிறப்பைப்பற்றியும் விளக்கிக் கூறினர்கள்.

---



# எதிர்காலம்

## திரு. K. முத்துஜோதிடர்

(சாதாரண௵ ஐப்பசி௴ 1௳ முதல் 29௳ முடிய)

(18—10—70 முதல் 15—11—70 முடிய)

௸ ஐப்பசி௴ பிரவேசம் புரட்டாசி௴ 31௳ சனிக்கிழமை இரவு 31/ நாழிகை 24 வினாடிக்கு கிருத்திகா நக்ஷத்திரமும் மேஷ லக்கினமும் கூடிய சுபவேளையில் ஸ்ரீ லோகபிரகாசகரான ஸ்ரீ சூரியபகவான், துலா ராசிக்குப் பிரவேசம் செய்கிறார். ௸ துலா விஷு புண்ணிய காலமும், துலாஸ்நான ஆரம்பமும் ஆகும். ௸ வருஷம் புரட்டாசி௴ 31௳ சனிக்கிழமையே தான் அனுஷ்டிக்கவேணும். ௸ துலாராசி பிரவேசகால பலத்தால் ஐப்பசியில் சஸ்யதான்யாதிகள் விருத்தி ஏற்பட்டு சீரான மழைகளும் அங்காங்கு கண்டம் கண்டமாய் பெய்து கொண்டு வரும். தென்தேசம் காவேரி தீரம் சுபிக்ஷமடையும் தர்மபூமிகளில், விசேஷ நன்மைகள் ஏற்படும், தெய்வ சக்தி ஓங்கும்.

**1. மேஷம் – அசுவதி – பரணி – கார்த்திகை ¼**

மேஷராசி 9 பாதங்களும், மிச்ரமான பலனைத்தரும். வரவு செலவு சமமாக இருக்கும். இடம் மாறல் ஏற்படும். ஜீவனத்தில் பலவிதமான மாறுதல்கள் உண்டாகும். ஆரோக்யக் குறைவு காட்டும். எதிர்பாராத சில நஷ்டமான பொருள்கள் வந்து சேரும். தெய்வபலம் முன்னின்று காக்கும். சனி, ஞாயிறு சுபமாகும்.

**2. ரிஷபம் – கார்த்திகை ¾ – ரோஹிணி – மிருகசீர்ஷம் ½**

ரிஷபராசி 9 பாதங்களும் பூர்ணமான சுபத்தைத்தரும். மங்கள காரியங்களால் சுபமான விரயம் ஏற்படும். புதிதாக

ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் வந்து சேரும் நஷ்டமான பொருள்கள் வந்துசேரும். வித்யை விருத்தியாகும். ஜீவனம் விருத்தியாகும். திங்கள், செவ்வாய் சுபமாகும்.

3. மிதுனம் – மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை–புனர்பூசம் ¾

மிதுனராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும், ஜீவனம் ஓங்கும். கீர்த்தி பத்திரம் கிடைக்கும். சஞ்சார பலன் அதிகமாகும். மேலோர் பெரியோர்களின் அன்பு கிடைக்கும். தர்மபுத்தியும், தெய்வபத்தியும் அதிகமாகும். சாதிக்கமுடியாததெல்லாம் சாதிக்க முடியும். புதன், வியாழன் சுபமாகும்.

4. கடகம் – புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்.

கடகராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். மேலோர் பெரியோர்களின் அன்பும், இல்லற சுகமும் அதிகமாகும். சுபகாரியங்கள் உண்டாகும். தனதான்யங்கள் விருத்தியாகும். வெகுகாலமாக எதிர்பார்த்து நடவாத காரியங்கள் எல்லாம் நடந்துவிடும். வெள்ளி, சனி சுபமாகும்.

5. சிம்மம் – மகம் – பூரம் – உத்திரம் ¼.

சிம்மராசி 9 பாதங்களும், மிச்ரமான பலனைத்தரும். வம்சம் விருத்தியடையும், இல்லறம் ஓங்கும். ஜீவனம் விருத்தியடையும். எல்லோருடைய உபகாரமும் பெரியோர்களின் ஆசிகளும் கிடைக்கும். வரவு, செலவு சமமாக இருக்கும். தெய்வசத்தி முன்னின்று காக்கும். ஞாயிறு, திங்கள் சுபமாகும்.

6. கன்னி – உத்திரம் ¾ – ஹஸ்தம் – சித்திரை ½.

கன்னியாராசி 9 பாதங்களும், மிச்ரமான பலனைத்தரும். சகலமான காரியங்களும் நினைத்தபடி நடக்காமல் தடங்கல் வந்துகொண்டு இருக்கும். எதிர்பாராத செலவுகள் அதிகமாக இருக்கும். யக்ஞயாகாதி பிரதிஷ்டா பலன்களும், வியவகாரத்தில் வெற்றியும், தெய்வபலத்தால் சித்திக்கும். தனதான்ய விருத்தி ஏற்படும். செவ்வாய், புதன் சுபமாகும்.

7, துலாம் – சித்திரை ½ – சுவாதி – விசாகம் ¾

துலாராசி 9 பாதங்களும், மிச்ரமான பலனைத்தரும். வரவு செலவு சமமாக இருக்கும். புண்ணிய க்ஷேத்திர தரிசனங்களும், சஞ்சார பலன்களும் உண்டாகும். வைத்திய செலவு அதிகமாகும். தெய்வ சக்தியாலும், பெரியோர்களின் ஆசியாலும் எல்லாம் நன்மையாகவே முடியும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

8. விருச்சிகம் – விசாகம் ¼ – அனுஷம் – கேட்டை.

விருச்சிகராசி 9 பாதங்களும் பூர்ணமான சுபத்தைத் தரும். தூரதேச பிரயாணமும் ஜலயாத்திரையும் ஏற்படும். உத்தியோகத்தில் மாறுதல்களும் மேல்பதவிகளும் கிடைக்கும். சுபமாகும்.

9. தனுசு – மூலம் – பூராடம் – உத்திராடம் ¼.

தனுர்ராசி 9 பாதங்களும் பூர்ணமான சுபபலனைத் தரும். புத்திராதிகளால் விசேஷமான நன்மை ஏற்படும். குடும்பம் விருத்தியாகும். வியாதி நீங்கும். ஆரோக்யம் தரும். நஷ்டமான பொருள் வந்து சேரும். ஜீவனம் விருத்தியடையும். தெய்வபலம் காக்கும். திங்கள், செவ்வாய் சுபமாகும்.

10. மகரம்– உத்திராடம் ¾ – திருவோணம் – அவிட்டம் ½.

மகரராசி 9 பாதங்களும் சுபத்தைத்தரும். உத்தியோக சம்பந்தமாய் அடிக்கடி சஞ்சாரம் இருந்துகொண்டு இருக்கும். பெரிய காரியங்களில் பொறுப்பான நிர்வாகம் ஏற்படும். எதிர்பாராதபடி தன லாபம் உண்டாகும். கீர்த்தி உண்டாகும். ஆரோக்யம் உண்டாகும். புதன், வியாழன் சுபமாகும்.

11. கும்பம் – அவிட்டம் ½ – சதயம் – பூரட்டாதி ¾,

கும்பராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். புதிதாக வஸ்திராபரண லாபங்களும், ஸ்தாவர ஜங்கம சொத்துக்களின் கிரய விக்ரயம் மூலம் லாபமும், சினேகிதர்களாலும் உறவினர்களாலும் உபகாரமும் உண்டாகும். எல்லாம் நன்மையாக நடந்துகொண்டு இருக்கும். வெள்ளி, சனி சுபமாகும்.

12. மீனம் – பூரட்டாதி ¼ – உத்திரட்டாதி – ரேவதி.

மீனராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். தூர தேசத்திலிருந்து அழைப்புப் பத்திரம் வரும். உத்தியோகத்தில் எதிர்பாராமல் மேல்பதவி கிடைக்கும். விவகாரம் ஜெயிக்கும். புத்திராதிகளால் நன்மை உண்டாகும். இல்லறம் ஓங்கும். மேலோர் பெரியோர்களின் ஆசிகளாலும், தெய்வபலத்தாலும் சகலமும் சுபமாகவே நடந்துகொண்டு இருக்கும்.

குறிப்பு :- ஷை சாதாரணஸு புரட்டாசிமீ 25உ முதல் ஷைமீ 31உ முடிய கன்னியாராசியில் செவ்வாய், புதன் சூரியன் சேருவதின் பலன் அர்ப்பசி மாதத்தில் விந்தியோத்தர பூமியும், தக்ஷிண பாரதத்தில் சமுத்திர தீரங்களும், அநேக விதமான உத்பாதங்களாலும், இயற்கைக் கோளாறுகளாலும், பயிர்களுக்குப் பூச்சிபுழு முதலிய ஈதிபாதைகளாலும், அமைதிக் குறைவினாலும் பலவிதமான சிரமங்கள் அணுகாமல் இருக்க சாதுக்களும், பக்தர்களும் தர்மிஷ்டர்களும் இடைவிடாது ஸ்ரீ கடவுளையே நம்பிக்கொண்டு அவரிடத்தில் சகல பாரத்தையும் ஒப்புவித்து உலகத்தைத் துக்கசாகரத்திலிருந்தும் காப்பாற்ற ஒவ்வொருவரும் பிரார்த்தனைகளை இடைவிடாமலே செய்து கொண்டுவர கருணைமூர்த்தியாகிற ஸ்ரீ பகவான் அங்காங்கு பல ரூபமாய் தோன்றி தர்மத்தை ரக்ஷித்து, துஷ்ட நிக்ரஹமும் சாதுரக்ஷணமும் செய்வார். உலகம் சுபிக்ஷமடையும் சுபமுண்டாகும்.



---

## துர்க்கா தியானம்

மாதர்மே மதுகைடபக்னி மஹிஷ ப்ராணுப ஹாரோத்யமே
ஹேலா நிர்மிததூம்ரலோசனவதேஹேசண்டமுண்டார்த்தினி
நிச்சேஷீக்ருத ரக்தபீஜதனுஜே நித்யே நிசும்பாபஹே
சும்பத்வம்ஸினி ஸம்ஹராசு துரிதம் துர்க்கே நமஸ்தேம்பிகே.

---

<u>மதிப்புரை :</u>

## அழகு(க்) கலைத் திறன்

பண்பட்ட சமுதாயத்தின் இன்ப உணர்வின் எழுச்சிமிக்க வேட்கையில் கலைகள் மலர்ந்தன. இலக்கியத்தையே கலையாகக் கட்டிய தமிழன் எழிலொழுகு கலை பல படைத்தான். ஆழ் மனத்தில் உந்திய அழகுணர்ச்சியின் வெளிப்பாடு புலன் கொளுவும் கலையுலகினைக் காணும் கனிவினைத்தந்தது. உலகெலாம் வியக்க ஓங்கிநின்ற தமிழர்தம் வண்கலைத் திறனெலாம் இன்று உருவிழந்துபோயின. நுண்ணுணர்வுத் திறமிழந்து. பருப்பொருளே பொருளெனக் கருதிய தமிழர்கள் ஏறத்தாழத் தம் கலையுணர்வினையே மறந்து கண்மூடி உறங்கினர்.

பண்பாடும், பாரம்பரியமும் மிக்க தொன்மை மிகு அழகு கலைகளை மீண்டும் அவனிக்குணர்த்தவேண்டுமென்ற நல்லார்வம் மிக்க சிலருள் திரு. செ. வைத்தியலிங்கம் அவர்களும் ஒருவர். அவர் வடித்த 'அழகு கலைத்திறன்' என்ற நூல் அருப்பொருள் மிக்க பன்னிரு கட்டுரைகளின் அற்புதப் பிணைப்பாக அமைகிறது. ஞானசம்பந்தம் உள்ளிட்ட இதழ்களில் அவர் எழுதிய கட்டுரைகள் சிலவற்றை, அழகு கலைகள் பற்றிய பொதுக் குறிப்புக்களோடு நூலாக்கித் தருகிறார்.

கலைகள் - அவற்றின் மாட்சி - கலைக் கூறுகள் - கற்பனை - கலைஞன் பற்றிய பொதுக் குறிப்புக்கள் முன்னர் நின்று கவினூட்டுகின்றன. ஓவியம், இசை, ஆடல் ஆகிய மூன்று கலைகளையே ஆசிரியர் அழகு கலை என விரிக்கிறார். சங்க இலக்கியத்திலும், சைவச் சமயச் சார்பிலக்கியங்கள் கலைவளர் மாளிகைகள் என மிளிர்வதை ஆசிரியர் இனங்கண்டு விளக்குகிறார். ஆடவல்லான் கூத்தினையும் அழகு கலை என அமைதி காட்டுகிறார். சிலம்பினை விளக்கும் எழிலோவியம் ஏற்றமுற அமைகிறது.

கலைகளின் மாட்சிகளை விரிக்கும் நூல்கள் இன்னும் வரவேண்டுவன ஏராளம் உண்டு. கலைகளின் மாட்சிகளை விரித்து வெளிவந்த பல நூல்களின் பிழிவாக வடிக்கப்பெற்ற இதனுள் தற்காலக் கவிஞர்கள் பலர் வடித்த கவிதைகள் கருத்து விளக்கம் பெற எடுத்தாளப் பெற்றுள்ளன. தமிழ்நடை நன்றாகவே அமைகிறது. சலிப்பில்லாத போக்கினை இத்தகு நூல்கள் வழங்குதல், எடுத்த கருத்தினை யாவரும் உணரப் பெருந்துணை கூட்டும். திருமுறைச்செல்வர். திரு. க. வெள்ளைவாரணனார் அணிந்துரையில் எழுதியதுபோல கலையுணர்வுடன் தமிழிலக்கியம் கற்கும் நெறியில் இவ்வுரைநடைநூல் உதவுதல்கூடும்.

— இரா. செல்வம்.

தருமையாதீனத்துக்குச்சொந்தமான புள்ளிருக்குவேளூர்

## ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானம்

## மகாகும்பாபிஷேக விழா மலர்

தென்னாட்டில் மிகச் சிறந்த பிரார்த்தனைத் தலமாக விளங்குவது புள்ளிருக்குவேளூர். இறைவன், தீராநோய் தீர்த்தருள்கின்ற வைத்தியநாதனாக விளங்குகிறான். முருகன் ஸ்ரீ செல்வ முத்துக்குமாரசுவாமி என்ற திருப்பெயரொடு விளங்கிவருகின்றார். சமய குரவர் முதலிய அருளாளர்கள் பாடிப் பரவிய திருத்தலம். இத்தலத் திருக்கோயிலைத் தருமையாதீனம் 25ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் இராஜ கோபுரங்கள், விமானங்கள் முதலிய அனைத்தையும் புதுப்பித்து 2—7—69 அன்று ஜீரணோத்தாரண அஷ்டபந்தன சுவர்ணபந்தன மகாகும்பாபிஷேகம் செய்வித்தருளினார்கள். கும்பாபிஷேக விழாவின் சிறப்பு மலர்இது. இம்மலர் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களது வாழ்த்துரையுடனும், திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் முதலியோர் வழங்கியருளிய வாழ்த்துச் செய்திகளுடனும் வெளி வருகிறது.

வேதம், ஆகமம், இதிகாசம், புராணம், திருமுறை, சாத்திரம், தோத்திரம், இலக்கியம், கலை, சமயம், வாழ்வியல், திருக்கோயில், மருத்துவம், கல்வெட்டு ஆகிய பல தலைப்புக்களில் அறிஞர்கள் பலர் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் இம்மலரை அணிசெய்கின்றன. டிம்மி 1 x 4 ஆர்ட் படங்கள் வெள்ளை கிளேஸ் காகிதங்கள். பக்கங்கள் 534.

விலை ரூ 14—00. பதிவஞ்சல் கட்டணம் ரூ. 4—00.

கிடைக்குமிடம் :— டிரஷரர். ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானம், வைத்தீஸ்வரன்கோயில், தஞ்சைமாவட்டம், தமிழ்நாடு.

Printed & Published by, K. Sundaresa Iyer, Agent Dharmapuram Adhinam, at the Gnanasambandam Press, Dharmapuram (Mayuram) 10—10—70.